ஓம் பரப்பிரம்மணே நம:

**64-பக்கங்கள்.**

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். " (திருக்குறள்.)



கமலம்-7. | சென்னை ஆங்கீரஸ௵ மார்கழிமீ 1உ | இதழ் 81.
Vol. 7. | 1932-ம்௵ டிசம்பர்மீ 16உ | No. 81.




"திருமாலுக்கடிமை செய்" என்று ஔவை கூறியிருக்கிறாள். மஹாவிஷ்ணுவானவர் இகலோகத்தில் ஸகல ஸுகங்களையும், பரலோகத்தில் ஸாம்பிராஜ்யத்தையும் அளிக்கவல்ல பரம கருணாநிதியானதால் அவருக்குத் தொண்டு செய்யும்படி ஔவை கூறுகிறார். நன்மை—புண்ணியம் முதலியன வெள்ளையென்றும், தீமை—பாபம் முதலியன கறுப்பென்றும் சில மதஸ்தர்கள் கூறுகின்றனர். அவ்வாறு நோக்குமிடத்து, திருப்பாற்கடலாகிய கிருபா ஸமுத்திரம் நன்மை நிறைந்ததாயிருக்கிறதாம். அதில் ஸ்ரீமந்நாராயணன் கறுத்த மேனியுடன் பள்ளிகொண்டிருப்பதானது, பக்தர்களை நோக்கி "ஹே ஜனங்களே! உங்களுக்காகவே இந்தப் பாற்கடலைப் படைத்திருக்கிறேன்; இதை வேறாக நினைக்கவேண்டாம்; என்னுள்ளத்தினின்றும் பெருகிய கருணை வெள்ளமே இவ்வாறு பாற்கடலாயிற்று" என்று சொல்வதுபோலிருக்கிறதாம். ஆதலின் லக்ஷ்மீபதியான ஸ்ரீமந்நாராயணனை தினந்தோறும் இந்தமார்கழியில் இடைவிடாது போற்றி ஸகல ஐசுவரிய ஸுகங்களையும் அடையக்கடவோம்.

ஃ

"இடத்துக்குத் தக்கபடி வணக்கம்" சூரியனை நமஸ்காரம் செய்வதாலும், மகாவிஷ்ணுவை அலங்காரம் செய்வதாலும், பரமசிவனை அபிஷேகம் செய்வதாலும் திருப்திபண்ணலாம் என்று சாஸ்திரம் கூறுகிறது. ஒவ்வொரு மூர்த்தியையும் ஒவ்வொரு விதமாய்த் திருப்திசெய்யவேண்டுமென்று ஏற்படு

றது. கருமங்கள் பலவகைப்பட்டிருப்பினும் அவற்றின் பயன் முடிவில் ஒன்றேயாகும். எல்லாக் கருமங்களையும் புரியவேண்டுவதவசியமே.

ஃ

"ஸ்ரீ கிருஷ்ணத்தியானம்" ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியை ஸதா தியானம் செய்துகொண்டிருப்பவர்கள் சுகமான நிலைமையை யடைவர். அவருடைய பாதாரவிந்தத்திலொழுகும் அமிர்தத்தையே ஸதா மனதில் தியானிப்போருக்குப் பசியில்லை. ஜெனன மரண துக்கங்கள் கிடையா.

ஃ

"சரீரம் ஆத்மாவின் கோயில்" சரீரமானது ஆத்மா வஸிக்கும் ஆலயமாதலின், அதை வெகு சுத்தமாயும் பத்திரமாயும் வைத்திருப்பது முக்கியம். மனிதர்கள் குடியிருக்கும் வீடுகள் சாக்கடை முதலியவற்றால் அடர்ந்து துர்நாற்றம் வீசுவதுபோல், ஆத்மா வசிக்கும் தேகமாகிய கிருகம் நவத்துவாரங்களிலும் பெருகும் மல மூத்திராதிகளால் துர்நாற்றமடித்து ஸத்கருமங்களைச் செய்வதற்கு அனுகூலமின்றிப் போகிறது. ஆகையால், சரீரத்தை ஸ்நானம் முதலியவற்றால் தினந்தோறும் மூன்று காலங்களிலும் சுத்தப்படுத்தி அதன் பின்னர் ஸத்கர்மங்களைச் செய்யவேண்டும். அன்றேல், குப்பைகளடர்ந்துள்ள வீட்டில் சமைப்பது எத்தனை அஸங்கியமோ, அத்தனை அஸங்கியமாகக் கருமங்கள் முடிந்துவிடும். ஈரமான சுவர் இடிந்து உள்ளே உட்காருகிறவர்களின் தலையில் விழுவதுபோல், நோயாளியானவன் கருமம் செய்யும்போது அவனுடைய தொண்டையிலிருந்து விழும் கோழைகளும் தும்மலும் அதைக்கெடுத்துவிடும். இதுதான் சரீரத்தை நோயின்றி வைத்துக்கொள்வதற்கான அவசியம். உதாரணமாக, ஒருவன் ஹோமம் வளர்த்து அதில் நெய்யை விட்டு ஆகுதி செய்துகொண்டிருக்கையில் திடீரென்று வாயிலெடுத்துக் கோழையை அந்த ஹோமத்தில் கொட்டினால் புண்யமுண்டாமா? ஆதலின், கர்ம யோகிகள் தங்கள் சரீரத்தில் நோய் அணுகாதபடி சுத்தமாய் வைத்துக்கொண்டு பகவத் தியானம் செய்கின்றனர்.

ஃ

"சிவாக்ஞை" என்று பெரியோர்கள் சொல்வதுண்டு. ஸகல காரியங்களும் பரமேச்வரனது கட்டளைப்படியே நிறைவேறுகின்றன. ஆகவே, ஒவ்வொரு காரியமும் அனுகூலமாக முடியும் பொருட்டு நாம் ஈச்வரனைப் பிரார்த்திப்பது நன்று. நமது ஊர் வீடு வாசல்களை விட்டு வெளிநாடு சென்ற காலத்தில் பலவித துன்பங்களிலும், பிணியின் வாயிலும் விழுந்து அவஸ்தைக் குன்றாகின்றோம். அவைகள் மிகவும் பிரமாதப்படும்போல் தோன்றிப் பயங்கரத்தைத் தரும் வேளையில், நமது தியானமூர்த்தி நம்மீது கருணைகூர்ந்து அந்த சோதனைகளை வெகு சுலபத்தில் நிவர்த்தியாகும்படி செய்து விடுகின்றார். நமது கையில் உண்டான ஒரு சிரங்கை டாக்டர் வந்து அறுத்தேயாகவேண்டுமென்பதில், மிக்க திகிலுடன் இரவில் ஸயனிக்கச் செல்லுகிறோம். நடு நிசியில் அந்த சிரங்கு தானே உடைந்து சீயானது வெளிப்பட்டு, நாளையதினம் டாக்ட

---

கிலரது சொற்கள் மேலுக்கு வெகு சிரிப்பும் நேசமும், உள்ளுக்கோ அவ்வளவுக்கும் கபடமாயும், பிறர்பொருள் அபகரிக்கும் தன்மையாயுமுள்ளன.

ரிடம் அகப்பட்டுக்கொண்டு தன்புறசபடி செய்து விடுகிறது. இது பகவத் கருணையால் நேர்ந்ததன்றோ?

ஃ

"நினைவு எப்படியோ நிலையும் அப்படி" யார் யார் எப்படிப் பகவானைப் பாவித்து வணங்குகிறார்களோ அந்த பாவனைப்படியே ஈசுவரன் தோன்றிக் கிருபை செய்கிறார். பகவான் ஸர்வ வியாபகர். அவர் தூணிலுமிருப்பர், துரும்பிலு மிருப்பர். மண்ணிலு மிருப்பர். மரத்திலு மிருப்பர். மித்திரனிடத்திலும் விளங்குவார். சத்துருவிடத்திலும் விளங்குவார். அவர் இல்லாத இடமேது? ஆகவே, கோயிலுக்குப்போய்க் கும்பிடுவானேன்? விக்ரஹத்தை வணங்குவானேன் எனில் ஸமாதானம் சொல்லுகிறோம் பேத புத்தியில்லாமல் ஸகலத்தையும் பிரம்மஸ்வரூபமாய்ப் பார்க்கிற ஞானிக்கு மண், மரம் என்ற வித்யாஸம் தெரியாது. அவனுடைய ஆத்மா ஆநந்தமாயிருக்கும். மண்ணென்றும், மரமென்றும் வித்யாஸம் பாராட்டும் பேத புத்தியுடைய அஞ்ஞானி விக்ரஹத்தை வணங்காமல் மண்ணை வணங்கினால் அவனுக்குப் பகவான் மண்ணைத்தான் கொடுப்பார். மரத்தைத் தெய்வமாக நினைத்துக்கொண்டேன் என்றால், அவன் ஞான ஸம்பத்தை யடையாமல் மரம் போல் நிற்க வேண்டியதே. விக்ரஹம் புருஷ ரூபமாய் ஸர்வாபரணம் பூண்டு ஜோதிர்மயமாய் விளங்குகிறதுபோல் விக்ரஹத்தை வணங்கும் நாம் பிரகாஸமான அறிவை யடைந்து ஆநந்த மெய்தவோம். அரசனைத் தரிசிக்கச் செல்லுவோன் அத்யத்புதமான ஸுவாசனை வீசும் புஷ்ப ஹாரத்தைக்கொண்டு போவானேயன்றி, அந்தப் புஷ்பஹாரம் ஐந்து ரூபாய்தானே பெறும்; அதற்குப் பதிலாய் இருபது கலத்தவிட்டைக்கொண்டு போய்க் கொடுப்போமென்றெண்ணுவானா? மதிப்பு மூன்றுதானே? ஏன் தவிட்டைக் கொடுக்கலாகாது? புஷ்பஹாரத்தை ஏனோ கொண்டு போகவேண்டும்? அதுபோல், பகவான் ஸர்வ வியாபகராயினும் மந்திரோச்சாடனங்களால் பிரதிஷ்டை செய்யப்பெற்ற உத்கிருஷ்டமான விக்ரஹத்தில் அவர் இருப்பதாய்ப் பாவித்து வணங்க வேண்டுமேயன்றி மண்ணிலும் மரத்திலு மிருப்பதாய் நினைத்துத் தாழ்ந்த புத்தியுடன் வணங்கலாகாது. தவிடுகொண்டு போனவனுக்கு ராஜ தரிசனம் கிடைக்காது. அவன் தான் கொண்டுபோன தவிட்டைத்தான் தரிசிக்கவேண்டும். அதுபோல், பெரியோர்கள் சென்ற வழியே செல்லாமல் அகங்காரத்துடன் மண்ணைத் தெய்வமென்று வணங்குகிறேன் என்பவனுக்கு மண்தான் கிடைக்கும். பகவத் கிருபை ஒருநாளும் உண்டாகாது.

ஃ

"மரியாதையின் அன்பு" பகவானுக்கு நாம் சோறு படைக்கவேண்டுமோ? கோயில் கட்டவேண்டுமோ? ஆபரணம் போடவேண்டுமோ? அவர் உலகத்தையே படைத்தவர். பொன்மலையைச் சிருஷ்டிப்பவர். ஸகல ஜனங்களுக்கும் ஸம்பத்தை யளிக்க வல்லவராயிற்றே என்று தூராக்ஷேபம் செய்யின் மேலே கண்ட உதாரணத்தையே கூறலாம். அரசனுக்கு ஐந்து ரூபாய் புஷ்ப

---

உலகத்தில் அவ்வப்போது தோன்றும் நிகழ்ச்சிகளெல்லாம் மனிதனால் புதிதாய் சிருஷ்டிக்கப்பட்டவையல்ல. அஃது இறைவன் திருவருளால் எதிர்பாராது உண்டாகும் சம்பவம்.

மாலை அகப்படுவதரிதோ? அரசன் அநேகருக்கு ஸன்மானம் கொடுக்கிறவனு யிற்றே. அவனைக் காண வேண்டியும், அவனுடைய தயவை அடையவேண்டி யும் ஆசிரிதன் தன் பொருளைச் செலவழித்துப் புஷ்பமாலை வாங்கிக்கொண்டு போகிறான். இது மரியாதையையும் அன்பையும் குறிக்கிறது. இதைப் போலவே, பகவத் பிரீதியை ஸம்பாதிக்கவேண்டி நாம் கோயில் கட்டுகிறோம். அங்கு பகவானை விக்ரஹமாய்ப் பாவித்து வணங்குகிறோம்.

ஃ

"பக்த வத்ஸலன், பரமதயாளு, ஸர்வஜீவ தயாபரர்" என்று பகவா னைப் போற்றுகிறோம். சாந்தஸ்வரூபியான பகவான் நாம் செய்யும் குற்றத்தை மன்னிக்காமல் நம்மைத் தண்டிக்கலாமா? ஈசுவரனுக்கு முத்தொழில் எதுக்கு? படைத்தல் காத்தல் ஆகிய இரண்டு தொழில் போதாதா? அழித்தல் தொழில் பிராணிகட்கு ஸங்கடத்தை விளைக்கிறதே. ஸம்ஹாரம் செய்யும் பரமேச்வரன் நம்மைக் காப்பதெப்படி? மனிதர்களாகிய நாம் பிள்ளை பெண்களைப் பெற்று அவர்கட்கு அன்னம் அளித்து வளர்க்கிறோம். ஆயினும், குழந்தைகள் நம் முடைய கட்டளைப்படி நடவாமல் தீய வழியிற் சென்றால், நாம் சும்மா இருக் கிறோமா? தண்டிக்கிறோமன்றோ? இப்படித் தண்டிப்பதால் நாம் அக் குழந்தைகளிடம் அபிமானமற்றவர்களென்று நம்மைப் பிறர் நினைக்கலாமா? நமது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து ஸன்மார்க்கத்தை யனுஸரிக்கும் பிள்ளைக்கு நல்ல பட்டாடை கொடுக்கிறோம். துன்மார்க்கிகளான பிள்ளைகட்கு நாம் கட்டிக்கொள்ளக் கொடுத்திருக்கும் வஸ்திரத்தைக்கூடப் பிடுங்கிக்கொண்டு கிழிந்துபோன பழய வஸ்திரம் கொடுக்கிறோம்- இதுபோல் பகவான் தமது பக்தர்கட்கு தேகாரோக்யம், ஸம்பத்து, ஸந்தானம், தீர்க்காயுள், உத்தம ஜென் மம் முதலியன கொடுக்கிறார். ஸத்கர்மாதிகள் பண்ணுவதற்காக அதற்கு அருகமான மனுஷ்ய சரீரத்தைக் கடாக்ஷிக்கிறார். தமது கட்டளைகளுக்குக் கீழ்ப்படியாமல் துஷ்டர்களா யிருப்போருக்கு இப்போது கொடுத்துள்ள மனுஷ்ய சரீரத்தைப் பிடுங்கிக்கொண்டு நிக்ருஷ்டமான மிருக சரீரத்தைக் கொடுக்கிறார். அதாவது, பாபம் செய்வோன் மிருக ஜன்மத்தை யடைகிறான் என்றபடி. அதன் பிறகாவது அவனுக்குப் புத்தி வரட்டும்; புண்யத்தைச் செய்யட்டும்; பட்டாடையாகிய மனுஷ்ய ஜன்மத்தை யடைந்து ஞான ஸம் பத்தைப் பெறட்டும் என்பது பகவானுடைய கருத்து. இது ஈசுவரனுடைய கிருபையை விளக்குகிறதேயன்றி, அவர் தயை யற்றவரென்று குறிக்கவில்லை.

ஃ

"இரண்டு செவிகளை ஏன் படைத்தார்?" உலகத்தில் நல்லவர் கெட் டவர் என்ற இருவகைச் சனங்க ளிருக்கின்றனர். ஒரு ஸமயம் ஒரு காதில் துஷ்டர்கள் கூறும் ஸங்கதிகள் நுழைந்தாலும், மற்றொரு காதையேனும் சிஷ் டர்களின் வார்த்தைக்குக் கொடுக்கவேண்டுமென்ற பரம கருணையாலேயே இரண்டு செவிகளை யீந்தார். துஷ்டர்களின் வசனங்களுக்கே ஈடுபடுத்தி மன

---

தனது மைந்தன் எவ்வளவு துடுக்கனுயினும் அவனை வெறுத்துவிடுவது முடியாத காரியம். இது பாசபந்தப் பிடிப்பின் பலத்தால் உண்டானது. இப்ப டியே மனிதன் தன் பிடிவாதத்தின்மேலுள்ள பற்றுதலால் நியாயமான விஷ யத்தைச் செய்யாமல் அலக்ஷியமாயிருந்து விடுகின்றான்.

லதைக் கெடுத்துக்கொள்வது புத்திமான்களுக்கு அழகாகுமா? அயோக்யமான அவர்களின் உபதேசங்களைக் கேட்பது நியாயமல்ல.

ஃ

"பாபீ சதா யுஷ்மான்" என்ற வாக்கியம் அநேகருக்குத் தெரியும். மகானுகிய ஆதிசங்கராசாரியர் 32-வயதிருந்தார். விவேகாநந்த ஸ்வாமிகள் சொற்ப வயதிலேயே மறைந்தார். இன்னும் அநேக மேதாவிகள் சிறிது காலமேயிருந்து மகத்தரமான காரியங்களைச் செய்தனர். பாபி மட்டும் 100-வயதிருப்பானேன்? அவன் இன்னும் அதிகமான பாபகிருத்யங்கள் செய்து வெகு காலம் நரக வாதனையை யனுபவிக்கட்டுமென்பது ஈசுவரனுடைய கருத்தாயிருக்கலாம். புண்ணியவான்களை அதி சீக்கிரத்தில் தம்முடைய திருவடியில் சேர்த்துக்கொள்ள வெண்ணி அழைத்துக்கொள்கிறார்போலும். மிகுந்த பாபம் செய்வோனை வியாதி முதலியவற்றால் எச்சரிப்பது ஈசுவரனுக்கு ஸம்மதமில்லை. காரணம், எச்சரிக்கை அவன் விஷயத்தில் பயன் படாதென்றே. அதற்காக பாபிக்கு அவர் யதேஷ்டமான ஆயுளை அருளி, கடைசியில் மகத்தான நோயையும் துக்கத்தையும் கொடுக்கிறார். பெரியோரைப் பழித்த வாய் பெரிய கணவாய். அறிஞர்களைக் கொடுமையாய்ப் பார்த்த கண்கள் பருத்த புண்கள். ஆகலின், பாபத்திற்கு அஞ்சியவனுய் ஸாதுக்களிடம் த்வேஷம் ஸாதிக்காமல் எல்லோரையும் கருணை நோக்குடன் பார்த்து நல்லவன் என்ற பெயரையடைந்து பகவத்தியானத்தில் மனதைச் செலுத்துவதே உய்யும் வழியாகும்.

## சந்தா நேயர்களே!



நான் பிரதி மாதமும் 15-ந்தேதி யன்று, அதாவது தமிழ் மாதம் முதல் தேதியன்றே சென்னையை விட்டு எனது காரியாலத்தினின்று வெளிபோந்து, தங்கள் இருப்பிடம் வந்து சேர்ந்தும், சில அன்பர்கள் என்னுடைய வாவைக் காணுது மனக்கவலைப்படுவது கேட்சு யான் மிக வருந்தலாயினேன். என்னை பரிபாலிக்கும் தலைவர், தங்களுடைய விலாசத்தை நன்றாகக்குறித்து என்னைத் தங்களிடம் காலம் தவறுது சேர்க்கும்படி, காருண்ணிய கவர்ன்மெண்டின் தபால் ஆபீசுக்கு அனுப்பிவிடுகிறுர். நான் அப்படித் தங்களை நாடி வந்தடையாவிடில், உடனே நேயர்கள் என் தாமதத்தைப்பற்றித் தங்கள் ஊரைச்சேர்ந்த போஸ்ட் மாஸ்டருக்குத் தெரிவித்தால் நான் ஒழுங்காக தங்களிடம் வந்தடைந்து விடுவேன்.

தங்கள் செல்வி,

அமிர்தினி.




# கல்வி கற்கக் கால எல்லை யுண்டோ?



வல் மட்டும் பெருகிவிடின் எதிர்படும் எத்துணைத் தடைகளையும் வென்று காரியசித்தி கண்டிடும் யாவும் மனோதிடத்தைப் பொருத்ததே. கல்வி கற்க எந்த சமயத்திலும் கூடுமென்பதற்கு எத்தனையோ மஹா பிரதாபர்களுடைய சரித்திரங்களைத் திருஷ்டாந்தமாக எடுத்துக்காட்டலாம். பருவம் முதிர்ந்தவர்களும் ஒரு வேலையைத் தொடங்க மனவுறுதி கொள்வார்களானால், அதை நன்றாக சாதிக்க மாட்டுவார்கள். ஸ்ரீ ஹென்றி ஸ்பேல்மன் ஐம்பதறுபது வயதாமளவும் சாஸ்திரம் கற்கத் தொடங்கவில்லை. ப்ராங்க்லின் பதார்த்த சாஸ்திரப் பயிற்சியில் நன்றாய்ப் பிரவேசிக்கும் பொழுது அவருக்குப் பருவம் ஐம்பதாகி விட்டது. ட்ரைடேனும், ஸ்காட்டும் நாற்பது வயதிற்குமுன் கிரந்த கர்த்தாவென்று பெயரெடுக்கவில்லை. போகாக்ஷோ என்பவர் கல்வி கற்கத் தொடங்கியது முப்பத்தைந்து வயதிலாகும். அல்பீரி என்பவர் க்ரீக் பாஷை பயிலத் தொடங்கியபொழுது அவருக்கு வயது நாற்பத்தாறு. ஆர்னல்ட் பண்டிதர் "நீபர்" எனும் கிரந்தத்தை மூல பாஷையில் வாசிக்கும் பொருட்டுப் பருவம் சாய்ந்தபின் ஜர்மானிய பாஷை பயின்றார். இவ்வாறே, ஜேம்ஸ் உவாட்டும் நாற்பது வயதில் க்ளாஸ்கோ நகரத்தில் தொழிற்கருவி செய்து வரும்பொழுது ப்ரான்சு பாஷை, ஜர்மானிய பாஷை, இத்தாலிய பாஷை இவைகளில் உள்ள அருமையான யந்திர தத்துவ வித்தியா கிரந்தங்களை வாசிக்கும் பொருட்டு அம்மூன்று பாஷைகளையும் கற்றார். "ஹிப்ரு" பாஷை வாசிக்கத் தொடங்கு முன்னே தோமாஸ் ஸ்காட்டுக்கு வயது ஐம்பத்தாறாகி விட்டது. மில்த்தன், டாந்தி என்னும் இரண்டு கலைவல்லோரையும்பற்றி மேக்காலே என்பவர் அவ்விருவரின் ஒப்பு உயர்வுகளைக் குறித்து ஒரு நூல் எழுதியிருந்தார். அந்த நூலின் யுக்தா யுக்தத்தைப் பகுத்தறிய விரும்பியவராய் ராபர்ட் ஹால் என்பவர் தமது முதுமைப் பருவத்தில் வியாதி யுபத்திரவத்தில் கிடந்தபொழுது ஒரு நாள் தரையில்

படுத்த படுக்கையில், இத்தாலிய பாஷையைப் படித்துக்கொண்டிருக்கக் காணப்பட்டார். ஹாண்டேல் இயற்றிய பிரபல கிரந்தம் எதுவும் பிரசுரமாகு முன்னமே அவருக்கு வயசு நாற்பத்தெட்டாயிற்று. முதுமையென்று எவரும் ஒப்புக்கொள்ளத்தக்க வயதில் நூதனமான துறைகளில் அடிகோலியவர்களையும், நூதனமான கல்விகளைக் கற்றுத் தெளிந்தவர்களையும்பற்றி இவ்வண்ணமே அநேகமாயிரம் திருஷ்டாந்தங்கள் எடுத்துக் காட்டலாம். வீணரும் சோம்பருமன்றி மற்றெவரும் "கல்வி கற்க எனக்கு வயசு சென்று போயிற்று" என்று ஒருபோதும் வீண் சாக்கு சொல்ல மாட்டார்கள்.

ஃ

லோகோபகாரமான பல பெருங்காரியங்கள் செய்து உலகதவை நிர்வகிப்பவர்களெல்லாம் பெரும்பாலும் புத்திகூர்மை யுடையவர்களல்ல; நிலை நீங்கா மனவுறுதியும் உள்ளக்கருத்தும் சோர்வற்ற முயற்சியு முள்ளவர்களேயாம். நிபுணர்களுடைய சாமர்த்திய புத்தியானது அவர்களுக்கு யோக்கிய வயது வருவதற்கு முன்னமே பக்குப்வபடுவதைப்பற்றி எவரும் மறுப்பதற்கு முடியாத திருஷ்டாந்தம் அநேகம் உண்டு. இளமையில் விளங்கும் புத்தி சாமார்த்தியமானது ஒருவன் பிற்காலத்தில் அடையப் போகிற ஏற்றத்தின் உச்சம் இவ்வள வென்பதை ஒருபோதும் குறிப்பிக்க மாட்டாது என்பது அனுபவத்தில் கண்ட உண்மை. யோக்கிய வயது வருவதற்கு முன்னமே புத்தி பக்குவப்படுவதானது, புத்தியின் திறத்தை விளக்கக்கூடியதுபோல் தோற்றினுலும், அது சில சமயங்களில் ரோக முண்டாவதற்கும், படிப்படியாய் அறிவு மங்தப்பட்டுப் போவதற்கும் ஒரு அடையாளமாக முடிவதும் உண்டு. இது பல இடத்துங் கண்டறிந்த தெளிவான விஷயமாகும். விசேஷமாக வியக்கத்தக்க புத்தி சக்தியுள்ளவர்களாயிருந்த பிள்ளைகள் எல்லோருக்கும் அவர்களுடைய பிற்கால நிலை—பின்னிலை—என்னவாகின்றது? தலை மாணுக்கராயும், பல வெகுமதிகள் பெற்ற வித்தியார்த்திகளாயும் விளங்கினே ரெல்லாம் இப்பொழுது என்ன செய்கின்றனர்?—எந்த கதியிலிருக்கின்றனர்?—அவர்கள் இப்போது எங்கே? அன்னேரின் நிலையை ஆதியோடந்தமாக விசாரித்துப் பார்ப்போமானுல், பள்ளியில் அவர்களுக்கு இளைத்துப் பின்னே கிடந்த மந்தபுத்தி யுள்ளவர்களாயிருந்தவர்கள் பிற்பாடு—

---

மனிதவர்க்கத்தில் ஒருவனுக்கொருவன் அடிமையாயிருப்பது தெய்வசம்மதமல்ல. குறித்த ஒரு சிலர் புண்ணிய உடம்பேகொண்டவர்கள்போல் காட்டுவதும், மற்றவர்கள் தங்களின் பாவம் தீரவும்புண்ணியம் பெருகவும் அவர்களைத் தொழுது வணங்கித் தாழ்ந்த படியிலேயே இருக்க வேண்டுமென்பதுமான அறிவீன இருள் எப்போதேனும் ஒரு காலத்தில் ஒழியத்தான் வேண்டும். இது மனிதனுல் கற்பிக்கப்பட்ட ஒரு சுயாலக் கட்டுப்பாடுதான்.

பிற்காலத்தில்—பெரும்பாலும் அவர்களை மிஞ்சிப் போயிருக்கிறார்களென்று காண்போம். பாடசாலையில் மிகுந்த புத்திசாலியாயிருந்து, அவ்விடத்திலேயே மந்த புத்தியாய்க் கிடந்தவனை மிகப் பழித்துப் பரிகசித்தவன் பிற்காலத்தில் தன் கல்வியையோ அறிவையோ உபயோகிக்காமல் ஒரு மிட்டாய்க் கடையில் ஊழியம் செய்து மிட்டாய்களைச் செய்வோனாகக் காலங்கழிப்போனானன். மந்த புத்தியாய்க் கிடந்தவனின் செய்தியோ—அவன் பிற்காலத்தில் மஹா பண்டிதனும், அநேக பெரும் நூல்களின் கிரந்தகர்த்தாவாகவும், கீர்த்தி வாய்ந்த பத்திராசிரியராகவும் பிரபலப்படுவதானான். இது வியப்புறத்தக்க விஷயமன்றோ? கெட்டித்தனமுள்ள வித்தியார்த்திகள் வெகுமதி அடையப் பெறுகிறார்கள் தான்; ஆயினுமென்ன; தங்களுடைய சுறுசுறுப்பாலும் கைவளத்தாலும் அவர்கள் பெற்றுகொள்ளும் வெகுமானங்கள் எப்பொழுதுக்குமே அவர்களுடைய விருத்திக்கு ஏதுவாயிருந்து உதவுவதில்லை. ஆதலால், செய்யும் பிரயத்தனத்திற்கும், விடா முயற்சியான உழைப்பிற்கும், சொன்ன சொற்கேட்டு அடங்கி நடக்கும் அமரிக்கையான அடக்கத்திற்குமே முக்கியமாய்ப் வெகுமதி கொடுப்பதே தக்கதாகும். ஏனெனிலோ, இயற்கையில் மிதமான அறிவுடையவனாயிருப்பினும், தன்னால் ஆமளவிற்கு முயற்சியோடும் வருந்திக் கற்கும் வாலிபனையே விசேஷமாய் உற்சாகப்படுத்துவதுதான் சிலாக்கியமாகும்.

ஃ

மேலேகூறிய விஷயத்திற்கு டாக்டர்‘லீ’ என்பவர் ஒரு தக்க உதாரணமாவார். அவர் கேம்பிரிட்ஜ் வித்தியாசாலையில் ‘ஹீப்ரு’ பாஷைக்குப் பிரதம பண்டிதராயிருந்து புகழ் பெற்றவராவர். வித்தியா விஷயத்தில் பொறுமையோடு விடாமுயற்சியும் மனோவுறுதியுமாய் உழைத்துப் பாடுபட்ட அவரது ஜீவிய சரிதை ஒரு நல்ல வழிகாட்டியாகும். அவர் இளமையில் தர்ம பாடசாலையொன்றிலே கல்வி பயின்றார். அங்கு அவர் சற்றுவது கருத்தாய்க் கற்காத கடை மாணாக்கராய்க் கிடந்தாராம். அவரது உபாத்தியாயர் தம்மிடத்தில் கற்றப்போன மாணாக்கரில் மந்தபுத்தியுள்ளோர் அனைவருள்ளும் அவரே மிக மந்தனென்றும் மொழிந்தாராம். பின்பு தச்சன் ஒருவனிடத்தில் லீ தொழில் பழகச்சென்று, அவர் வளர்ந்து ஆடவனாமளவும் தச்சு வேலையே செய்து வருவதானார். வேலை ஒழிந்திருக்கும் சமயத்தில் வீண்பொழுது போக்காமல்

---

ஒழுக்கமுடையவனே உயர் குலத்தானென்பது உயர்ந்தோர் அறிந்த உண்மை வாசகம். ஒழுக்கம் தவறியகாலத்து அவ்விதம் தவறிக்கிடக்கும் உண்மையை எவ்வளவு தான் மறைத்துப் பூர்வப் பெருமையை வெளிக்குக் காண்பித்துக் கொண்டபோதிலும், அந்த நடிப்பு ஒரு காலத்தில் வெளிப்பட்டே தீருகிறது.

ஏதாவதொன்றை வாசித்தவாறு இருந்தார். அவ்விதம் வாசித்த புஸ்தகங்களில் சிலவற்றில் லத்தீன் வாக்கியங்கள் மேற்கோளாய் எடுத்துக்காட்டியிருக்கக்கண்டு, அவற்றின் பொருளையறிய ஆசை கொண்டு லத்தீன் இலக்கண புஸ்தகம் ஒன்று கிரயத்திற்கு வாங்கி அந்தப் பாஷையைக் கற்கத் தொடங்கினர். "ஒருவன் விரும்பும் மற்றெந்த விஷயத்தையும் தெளிய அறிந்து கொள்வதற்கு இருபத்து நான்கு எழுத்திற்கு மிஞ்ச ஏதாவது அறியவேண்டுமா?" என மகா புத்திசாலியான ஸ்தோன் என்ற ஒரு தோட்டக்காரன் கூறியிருப்பதை இந்த சமயம் நினைப்பூட்டிக்கொள்வது பொருந்தும். முயற்சியுள்ளவனுக்கு ஒரு பாஷையில் அக்ஷரஞானம் வந்துவிட்டாலே போதுமென்பதும், அதைக்கொண்டு அவன் விருத்தி செய்தவாறாகமேன்மேலும் வாசித்து உச்சிக்கு எட்டிவிடுவானென்பதும் மேற்சொன்ன வாக்கியத்தின் கருத்தாகும். 'லீ' நித்திரையினின்று பொழுதோடு எழுந்து இராத்திரி நாழிகை ஏறுமளவும் விழித்திருந்து கற்றதினால், தொழிலிற்பழக உடன்பட்ட காலம் கழியுமுன் லத்தீன் பாஷையில் தேர்ந்த பண்டிதரானர். ஒரு நாள் ஒரு தேவாலயத்தில் வேலை செய்யும் பொழுது க்ரீக் பாஷையில் வேத நூலாகிய 'புதிய ஏற்பாட்டு'ப் புஸ்தகத்தைக் கண்டு, அந்தப் பாஷையும் கற்கவேண்டுமென்னும் ஆசை அந்த க்ஷணமே அவர் நெஞ்சில் உதித்தது. அதன் பொருட்டு அவர் தமது லத்தீன் புஸ்தகங்கள் சிலவற்றை விற்று, க்ரீக் இலக்கண புஸ்தகம் ஒன்றும், அகராதி ஒன்றும் வாங்கிக் களிப்புடன் வாசித்து விரைவில் அந்தப் பாஷையில் தெளிந்த நிபுணரானர்.

ஃ

பிற்பாடு க்ரீக் புஸ்தகங்களை விற்று ஹீப்ரு பாஷா புஸ்தகங்கள் வாங்கி, எந்த உபாத்தியாயர் உதவியுமின்றி, புகழ்ச் செல்வமாவது, பொருட் செல்வமாவது பெற நாடாமல், கல்வியைக் கல்விக்காகவே விரும்பி அப்பாஷையைக் கற்றார். அப்பால் கால்டீ, ஸீரியாக், ஸமாரிதன் பாஷைகளையும் கற்றுத் தேர்ந்தார். ஆனல், ஓயா தெப்பொழுதும் அவர் பயின்ற கல்விப் பயிற்சி அவரது தேக சௌக்கியத்தைத் தாக்கத்தொடங்கி, நாட்பட ராத்திரி காலத்தில் துயிலொழிந்து விளக்கொளியில் நூல் வாசித்து வந்ததனல் அவருக்கு நேத்திர ரோகம் உண்டாயிற்று. ஆனது பற்றிச் சிறிது காலம் புஸ்தகங்களை வைத்து விட்டு ஆறியிருந்து உடம்பு தேறியபின் அவர் மறுபடியும் முன்போலவே அனுதின

---

தொலைவிலிருந்து சொல்லக்கூடியவர்கள், தொழிற்சாலைக்குள் நுழைந்து அதைச் செய்துபார்த்தால் மற்றவர்கள்மேல் சொல்லக்கூடிய தப்பு தங்களையே பாதிக்கும். விஷயங்கள் ஒன்று தெரிந்தால் எல்லாம் தெரிந்த மாதிரி வாய் வீச்சு பேசிக் கோபிப்பவர்களுமுண்டு. M. D. N.

மும் வேலை செய்துகொண்டு வந்தார். தச்சு வேலையில் அவர் மிகத் திறமை யுள்ளவர் என்று ஊர் அறியப்பெற்றதனால் வேலை மேலு மேலும் படிந்து கைப்பொருள் ஏறியது. ஆகவே, அவர் விவாக யோக்கியதை யுள்ளவராகி இருபத்தெட்டு வயதில் மணம் புரிந்தார். அதன் பின் அவர் வித்தியா விநோதமாகிய சுகபோகத்தை நிறுத்தி விட்டுக் குடும்ப ஸம்ரக்ஷணைக்குரிய தொழிலில் கண்ணாயிருக்கத் தீர் மானித்துப் புஸ்தகங்கள் அனைத்தையும் விற்றார். அப்படியிருக்க, அவருக்கு ஜீவனாதாரமாயிருந்த தொழிற் கருவிப் பெட்டி தீக்கிரை யாய்ப்போய் வறுமைப்பிணி அச்சம் காட்டி அவரை வருத்த ஆரம் பித்தது. அவ்வண்ணம் நேராதிருக்குமாயின், அவர் ஜீவனுள்ளள வும் தச்சுவேலை செய்தே உழைப்பவரா யிருந்திருக்கக்கூடும். புதுக் கருவி வாங்க அவர் கையில் காசு ஒன்றும் இல்லை. ஹா! இந்த மஹா பண்டிதருடைய வறுமைதான் என்னே!

ஃ

பிறகு வேறு விதியின்றிப் பிள்ளைகளுக்கு எழுத்தறிவித்துப் பிழைக்க நினைத்தார். இத்தொழிலுக்கு மூலதனம் எவ்வளவும் வேண்டியதில்லையே. ஆயினும், பிள்ளைகட்குக் கற்பிக்கும் போதனு முறையை அவர் அறிய வேண்டியதாயிருந்ததால், மனவுறுதியுள்ள அவர் அதிலும் சிரத்தையாய்ப் பயின்று தேறிக் குழந்தைகளுக்குக் கற்பிக்கத்தொடங்கினர். அவர் ஒய்யாரமின்றி நிஷ்கபடமும் சிறந்த ஒழுக்கமு முடையவரென்று காணக்காணப் பலர் அவருக்கு இஷ்ட ராயினர். இந்த வித்தகனாகிய தச்சனுடைய கல்விப்பேற்றைக் குறித்து எங்கும் புகழ்ச்சி உண்டாயிற்று. பின் அயலூர்க் குரு வாகிய ஸ்காட் என்பவரின் உதவியால் தர்ம பாடசாலையில் உபாத்தி யாயராய் அமர்ந்தார். அவரது இஷ்டர்கள் அவருக்கு வேண்டிய புஸ்தகங்கள் வாங்கிக்கொடுக்க, அவர் முறையே அரபி, பாரவீகம், ஹிந்துஸ்தானி இந்தப் பாஷைகளைக் கற்றுத்தெளிந்தார். முன்பு உதவி செய்த ஸ்காட் என்பவரின் முயற்சியால் அவர் கேம்ப்ரிட்ஜ் ஸர்வ கலாசாலையைச் சேர்ந்த க்வீன்ஸ் காலேஜில் உபாத்யாயராகி, அங்கும் கற்றுக் கணிதத்தில் வல்லவரென்று குறிக்கொள்ளப் பட் டார். பின்பு அரபி, ஹீப்ரு பாஷா பண்டிதர் உத்தியோகம் காலி யாக, அந்தக் கௌரவமான பதவிக்கு யோக்கியரென்று அவ ரையே தெரிந்தேற்படுத்தினர்கள். அவர் அந்த உத்தியோகத்தை வெகு சாமர்த்தியமாய் நிர்வகித்தார். கிறிஸ்து வேத புஸ்தகத்தை ஆசியாவில் வழங்கும் சில பாஷைகளில் மொழிபெயர்த்தார். பின்பு அவர் ந்யூஜிலாந்து பாஷையைத் திட்பநுட்பமாய்க் கற்றுக் கொண்டு, அப்பொழுது இங்கிலாந்திலிருந்த ந்யூஜிலாந்து குறுநில மன்னர் இருவருக்காக இலக்கண புஸ்தகம் ஒன்றும், நிகண்டு ஒன் றும் இயற்றினர். இவ்விரண்டு புஸ்தகங்களும் இப்பொழுது ந்யூஜி லாந்து பாடசாலைகளில் அநுதினமும் வழங்கி வருகின்றன. ஸாம்யு

யெல் லீ பண்டிதரின் வியக்கத்தகுமான சரித்திர சங்கிரகம் இத்தன்மையதாம். இப்பெரியார்தான் ஆதியிலே இளமையின்போது பாடசாலையில் மந்த புத்தியுள்ள கடைபட்டவரென்று இகழப்பட்டார். அத்தகைய மந்தமதி பிற்காலத்தில் எவ்வாறு புகழோங்கினர் பாருங்கள்! இலக்கியவிலக்கணங்களிலும் சாஸ்திரங்களிலும் நிபுணர்களென்று குறிகொள்ளத்தக்க பண்டிதர்கள் பலருடைய சரித்திரங்களில், தன்னைத்தான் பண்படுத்துவதில் விடாமுயற்சியைக் குறிப்பிடுகின்ற நீதி போதகமான பல திருஷ்டாந்தங்களுள் இதுவும் ஒன்றும்.

ஃ

வழிதப்பி விரைந்தோடும் பந்தயக் குதிரையைவிட, சரியான வழி தெரிந்து செல்லும் ஆமையே கெலிக்கும். முயற்சியுள்ள வாலிபன் மந்தனுயிருப்பினும் பெரிதல்ல. ஒன்றை விரைவில் கற்றுக்கொள்ளும் இளைஞன் அவ்வண்ணமே விரைவில் அதை மறந்திடுவான். கருத்தாய்க் கற்பதையும், உறுதியுடன் விடாமுயற்சி புரிவதையும் ஒரு அற்பமாக அந்த சுறுசுறுப்புசாலியான இளைஞன் நினைத்து விட்டு விடக்கூடும். மந்த குணமுள்ள வாலிபனே அவ்விரண்டு குணங்களையும் அப்பியாசித்தால்தான் முன்னேற முடியுமானதால் கருத்தாயும் முயற்சியாயு மிருப்பான். எவ்வகை யோக்கியதையும் அமைவதற்குமேற்சொன்ன இவ்விரண்டு குணங்களே முக்கியமாம். ஆகவே, தீவிர புத்தியானது தோஷமானுலுமாகும். "என் தற்கால நிலை என் சொந்த முயற்சியாலாகியது" என "டேவி" என்பவர் தம்மைக்குறித்து மொழிந்தது யாவருக்கும் ஏற்கும்.

ஃ

கடைசியாய்ச் சொல்வதாவது:—சிறந்த விற்பத்தி பெரும்பாலும் சாதாரணமான பள்ளியிலாவது, உயர்ந்த வித்தியாசாலைகளிலாவது, உபாத்தியாயர்களாலாவது அமைவதல்ல; ஆடவரானபின் அவரவர் தம் முயற்சியால் கற்றுக்கோள்வதனுல் அமைவது. ஆகவே, தாய் தந்தையர் தங்கள் பிள்ளைகளின் புத்தியை வலிமையாய் முதிர்விக்க ஆத்திரப்படவேண்டிய நிமித்தமில்லை; அவர்கள் பதறுமல் பொறுத்துக் காத்திருந்து ஒழுக்கமும்—அடங்கிச் செய்யப் பயில்வதும்—கூடியவரை கற்பதும்—ஆகிய குணங்களில் தடையின்றித் தம் பிள்ளைகளைத் தேறும்படி செய்வித்து, இதற்கு மிஞ்ச நடப்பதெல்லாம் தெய்வச்செயல் என்றிருக்கக்கடவர்கள். இளைஞரைத் தடையறத் தேகாப்பியாசம் செய்யுமாறு புரிந்து, தேகவலிமையும் தேக சுகமும் அடையவிடுவதும், தம்மைத் தாம் பண்படுத்தும் நெறியில் முயற்சிக்குமாறு அப்பியாஸப்படுத்தித் தூண்டி விடுவதும், கருத்தையும் கடைப்பிடியையும்—அதாவது சிரத்தையையும் விடாமுயற்சியையும் வழக்கப்படுத்திவரக் கவனத்தோடும் கற்பித்து

வைப்பதுமே மாதா பிதாக்களுடைய கடனாகும். இளைஞர் பருவம் எறாமற் நேறுவதற்குரிய சாதனம் இருந்தால், எப்பொழுது வேண்டுமானாலும், எந்த வயதிலானாலும், தம்மைத்தாம் பண்படுத்திக்கொள்ள வல்லவராவார்கள். கல்வி கற்கக் கால எல்லையும் உண்டோ? நாம் நாடோறும் ஒரு புதுக் கல்வியைக் கற்றவாறாகவே தான் இருக்கிறோம். மனோவுறுதியிருப்பின் முடியாததொன்றுமில்லை.




(480-ம் பக்கத் தொடர்ச்சி.)



## "டிக்கன்ஸ்" என்பவரின் மொழிகள்.

861. Think and speak and act like an accountablee creature.

யோசித்துப் பேசு. உத்தரவாதமுள்ள சீவ ஜந்துவைப்போல் நட.

862. May mercy be showed to me as I show it to others.

நான் பிறரிடத்தில் இரக்கம் காட்டுவதுபோல், என்னிடத்தும் தயவு காட்டப்படுமா?

863. You can't make a head and brains out of a brass knob with nothing in it.

வெறும் பித்தளைக் குமிழியிலிருந்து தலையையும், மூளையையும் நீ செய்ய முடியாது.

864. There are times when ignorance is bliss indeed.

அறியாமை பேரின்பமாக முடியும் காலங்களும் இருக்கின்றன.

865. All good things perverted to evil purposes are worse than those which are naturally bad.

எல்லா நல்ல விஷயங்களும் கெட்ட வழிகளில் உபயோகப்படுத்தப்படுமானால், அவைகள் இயற்கையாகவே கெட்டவைகளாக இருப்பவைகளைவிடக் கேவலமானதாகும்.

866. You must not attach too great weight to a remark founded on first appearence.

முதல் தோற்றத்தில் காணப்பட்ட ஒரு குறிப்புக்கு நீ அதிகமாக மதிப்புத் தராதே.

867. Injustice is in itself, to every generous and properly-constituted mind, an injury of all others the most insufferable.

தயாள இருதயமும், செவ்வனே அமைந்த மனமுமுடையோருக்கு அநீதி எல்லாவற்றைவிடக் கொஞ்சங் கூடப் பொறுக்க முடியாத தீமையாகும்.

868. There are certain polite forms and ceremonies which must be observed in civilised life, or mankind would relapse into their original barbarism.

நாகரீக வாழ்க்கையில் அநுசரிக்க வேண்டிய சிற்சில மரியாதை வழிகளும், முறைகளுமிருக்கின்றன. அவ்வாறு அநுசரிக்காவிடில் மனிதர் பழைய காட்டு மிராண்டிகளின் காலத்திற்கே திரும்ப நேரிடும்.

869. My advice to you is, to cheer up, to keep a good heart, and to know your own value.

நான் உனக்குச் சொல்லும் புத்திமதி யாதெனில், உற்சாகத்துடனிரு, நல்ல இருதயத்துடனிரு, உன்னு

டைய மதிப்பை இன்னதென்று தெரிந்துகொள்.

870. And how hard, to grow old and die and think we might have cheered and helped each other!

இறக்குந் தருவாயில் நாம் வாழ் நாட்கள் முழுவதையும்—நாம் மற்றவரைக் குதூகலிக்கச் செய்தோமென்றும், அவர்களுக்கு நம்மாலான உதவிகளை இயற்றினோமென்றும் நினைத்து அவ்வகையில் புளகாங்கிதமடைவது மிகவும் கஷ்டமானதாகும்.

871. In journeys, as in life, it is a great deal easier to go down hill than up.

நம்முடைய பிரயாணத்திலும் நமது வாழ்நாட்களிலும் ஒரு கஷ்டமான காரியத்தைச் செய்யாமல் விட்டுவிடுவதைவிட செய்வதுதான் மிகவும் கடினமாகும்.

P. G. துலசேகரன்.

## மக்களின் குண பேதங்கள்.

மக்களுக்கு முதன் முதல் தோன்றும் எண்ணங்கள் நல்லெண்ணங்களே. பிறகே தங்களின் சுய நலங்கோரி, பிறர்க்கு என்ன நேரிடினும் தமக்கென்னவென்று ஒதுங்கிக்கொள்ளும் சிந்தை தோன்றுகின்றது. மற்றவர் துன்புற்ற இடத்துத் தாம் துன்புற்றும், இன்புறுதலைக் கண்டு இன்புற்றும் ஒழுகிவருவோரது குணம் தெய்வகுணமாகும். பிறர் அல்லற்படுவதைக் கண்டு தம்முள் மகிழ்வோர் கீழோர்—கீழ்மக்களே ஆவர். இன்னோரது குணங்கள் தீய குணங்களாகும்; மிருக குணங்களாகும்; பிசாசின் குணங்களாகும். தெய்வகுணமாகிய இரக்க குணமுடையோர் "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்று மற்றவர் உன்னத நிலையையே கருதி உடல், பொருள், ஆவி ஆகிய இம்மூன்றனையும் உலகுக்குக் கொடுப்பார்கள். இவ்வளவின்றிப் பிறருடைய உணவை உண்டு, பிறருடைய பானத்தைப் பருகி, பிறருடைய உடையை உடுத்து, பிறருடைய செலவில் கல்வியைக் கற்று அவ்விதம் ஆதரித்தவர்க்கே உலை வைக்கின்ற குணசாலிகளை ஆண்டவன்தான் கேட்கவேண்டும்.

குறிப்பறிந்து உன் இஷ்டப்படியெல்லாம் உன் மனதைக் குளிரச் செய்திருக்க, பின் நீ எதற்காக என் மனத்தை எரிய வைத்துவிட்டாய்? இதில் நீ வாரிக்கொண்டதென்னவோ? இது உன் விபரீத காலபுத்திதானோ?

# சிறுமணித்திரள்

(504-ம் பக்கத் தொடர்ச்சி.)

1057. உலகத்தில் ஆடவர்கள் தமது இளையாள் மோகத்தினுல் மூத்திய மனைவியின் மக்களை வெறுத்தாலும், அவர்களுக்குத் தங்கள் தந்தையிடமுள்ள அன்பு மாறுவதில்லை.

1058. கேசங்கள் எவ்வளவுக்கு எவ்வளவு கருமையாக இருக்கின்றனவோ அவ்வளவுக்கும் ஆயுள் நீட்சியும், வன்மையான தேகமும் உண்டென வைத்திய சாஸ்திர வல்லுநர் கூறுவர்.

1059. ஒருவனுக இல்லாமல் குடும்ப சமேதமாய்ப் பெண்களோடு வருபவர்களை எவ்வூராரும் எவ்வீட்டினரும் இருக்க இடம் தந்து உபசரித்துத் தாங்கள் ஒதுங்கி யிருந்து கொண்டு, அவர்களுக்குத் தாராளமாக இருக்கவிட்டுக் கொடுப்பது நமக்குள் வழக்கமன்றோ?

1060. சில குடும்பங்களில் புருஷர்கள் அடங்கிக் கிடக்கப் பெண்களே சர்வாதிகாரத்தையும் கொண்டு ஆண்மாரிகளாய் அட்டகாசத்துடன் விளங்குவதுண்டு.

1061. வீட்டின் தலைவன் மீறி ஏதாகிலும் பேசினுலோ முறத்தால் அவன் முகத்தில் இடித்து, யானையை அங்குசத்தால் மாவுத்தன் அடக்குவது போல் அடக்கி, 'சீ! பிணமே! சும்மாகிட' என்று ஆசீர்வதிக்கும் பெண்களுமுண்டு.

1062. அடங்காப் பிடாரியை யடக்குவது யார்? காலம் தான் அடக்கவேண்டும். கணவனைப் படுத்தும் பாடு பின் தான் அநாதை யாவதற்கே தான். வீட்டிலுட்கார்ந்து உண்ணும் சோம்பேரியே மருமகனுக அவள் பெண்ணுக்கு வருவான்.

1063. வந்த இளைய மனைவியால் ஸதா கலகமும் சச்சரவுமாகி, எப்போது பார்த்தாலும் மூத்த மனைவியையே நினைத்துக்கொண்டு கண்ணீர் ததும்புவார் சிலர்.

1064. பொருமைப்படுவது தந்தையின் வழக்கமல்ல. மற்றொருத்திக்கு நாயகரானதே தவிர, தந்தை என்றைக்கும் தன் தந்தைதானே. அவரிடத்திலுள்ள அன்பு என்றும் நிறைந்த அன்புதான்.

1065 மற்றொருத்தியின் ஈனவிர்த்திக்கும், கற்பொழுக்கம் குன்றினமைக்கும் நாற்றும் பாவை நல்லாள் ஒருத்தி, அந்தரங்கத்தில் தானும் அப்படியே இருந்துகொண்டு வெளிமுகத்தில் மகா பதிவிரதா சுந்தரியாகப் பசப்பிக்கொண்டிருக்கலாம்.

1066. மனம் பொருந்திய இடத்தில் மந்தஹாஸம்—மங்களம்.

1067. ஸதா கொலைகளையே செய்தவன்கூட தான் ஈன்ற குழந்தையை ஆர்வத்துடனும் தழுவிக்கொண்டு மகிழ்ச்சியிற்பொங்குகிறுன்.

1068. பேதம் ஏற்படாத இடத்தில் என்றைக்குமே பேதம் ஏற்படாதுதான். களங்கம் கருதுவோர், தோஷம் பேசுவோர், குற்றப் பத்திரிகை படிப்போர் எங்கும் தான் படிப்பார்கள். அவர்கள் திருந்துவதும் கஷ்டம். எல்லா வற்றுக்கும் மனமே காரணம்.




# கீழ்நாட்டுக் காரிகையார்.

"பெண்ணுக்கு விடுதலை நீ ரில்லை யென்றால்
பின்னிந்த வுலகினிலே வாழ்க்கை யில்லை."—பாரதியார்.



சென்ற சில நூற்றாண்டுகளாகக் கீணாட்டில் ஆணுக்கொரு நீதி; பெண்ணுக்கொரு நீதி. பெண் ஒழுக்கத்திலும் நடையிலும், மற்றும் பல்வழியிலும், ஆணைவிட நிறைவுள்ளவளா யிருக்கவேண்டுமென எதிர்பார்க்கப்படுகிறது. ஆகையினாலேயே ஆண் பல மனையாளை மணத்தினால் தன்னுடன் பிணைத்துக் கொள்ளலாம். ஆனால், பெண்ணோ ஒரு மணாளனைத் தவிர்த்து வேறொருவனைக் கனவிலும் நனவிலும் கருதலாகாது. ஆடவரோ, பெண்டாட்டி இறந்தால் மற்றும் பல மனைவியரைக் கொள்ளலாம். ஆனால் பெண்டிரோ புருடன் இறந்தவுடன், தம் உடலழகுக்கு ஊறு செய்து, சித்தத்தைச் சிவன்பாலிருத்தி மறுமணம் என்பதை மனதினாலும் எண்ணாதிருக்க வேண்டும்.

ஃ

ஆண்மகனொருவனுக்குத் தன் இல்லாள் பிடிக்காவிட்டால், காலுக்காகாத செருப்பைக் கழற்றி எறிவது போல், அவளைத் தக்ஷணமே திரஸ்காரம் செய்துவிடலாம். ஆனால் மகளிரோ, தம் கணவன் கண்கெட்ட குருடனாயினும், ஒரு அக்ஷரமும் அறியாத நிரக்ஷரகுக்ஷியாயினும், குடித்துக் குப்பையில் புரண்டு, நாளும் அறிவையிழந்து, விலங்கை நிகர்த்து, வாழ்க்கைக்குதவாத வீணனேயானாலும், அவனுடன் வாது பேசாது வாழ்ந்து வருதல் வேண்டும். இப்படி ஆணுக்கொரு நீதியும் பெண்ணுக்குப் பிறிதொரு நீதியும் வழங்கிய கொடுமையாலே இன்று கீணாடு இத்தாழ்வான நிலைமைக்கு இழிந்து விட்டது என்று சொல்லவும் வேண்டுமோ!

கீணாட்டிலே பெண்டிர், ஆடவரினும் தாழ்ந்தவரெனக் கருதப்பட்டனர்; அவர் முகத்தை மூடி மூலையில் வதிந்தனர்; கல்வியற்று இருளில் உழன்றனர்; கடைசியில் தங்களுள்ளே ஒளிரும் "பிர்மத்தையும்" அறவே மறந்தனர். அதன் பயனாய், அவர்தம் உயிருங்கெட்டு, உணர்ச்சியும் குன்றி, இறுதியில் சிற்றின்பம் தருதற்குரிய பொறிகள் போலாயினர். எனவே, சமூகத்தில், ஆணோடு பெண் சரி நிகர் சமானமாய் நின்று, கடனாற்றல் எப்படிக்கூடும்?

வாசகர்களே! ஆணுக்கொரு நீதி பெண்ணுக்கொரு நீதி என்பது நமது சமூகமாகிய உடலின்கண்

ஏற்பட்டதொரு புளாயோடும் புண்ணாகும். அப்புண் வளர இடங்கொடுப்போமாயின், அது உடல் முழுவதையுமே அரித்துத் தின்றுவிடும் என்பதில் ஐயமில்லை. ஆயினும் காலப்போக்கு வேறுவிதமாகத் திரும்பிவிட்டது.

பெண் அடிமை மிகுந்த நாட்டில் காவியமேது; ஓவியமேது; அன்பேது; அருளேது; அறமேது; ஆண்மையேது; கலையேது; கல்வியேது; காதலேது; அம்மம்ம! அடிமை நாட்டின் அலங்கோலத்தைச் செப்பவும்போமோ!

V. பசுபதி.

# சிலோன் அன்பர்கட்கு

## முக்கிய விண்ணப்பம்.

பினாங்கு, சிங்கப்பூர், மலாய் முதலிய வெளிநாடுகட்கு அனுப்பப்படும் வி. பி. பார்ஸல்கள் வாங்கப்படாமல் திருப்பியனுப்பப்பட்டால், இரண்டு மடங்கு வி. பி. சார்ஜ் கட்டி அவைகளைப் பெற்றுக்கொள்ளவேண்டியிருப்பது போலவே, **சிலோனுக்கு** அனுப்பப்படும் பார்ஸல்களும் திருப்பி அனுப்பப்பட்டால் இரண்டு மடங்கு சார்ஜ் கட்டிப் பெற்றுக்கொள்ளவேண்டும் என்று தபால் அதிகாரிகள் உத்தரவிட்டிருக்கின்றனர். ஆதலின், சிலோன் நேயர்கள் தங்கட்குத் தேவையான சாமான்கட்கு ஆர்டர்கொடுக்கும் போது சாமான்கட்குள்ள விலையையும் தபால் சார்ஜையும் சேர்த்து முன்பணமாக மணியார்டர் மூலம் அனுப்பினால் நாங்கள் வீணாக நஷ்டமடைய நேராது என்பதை இதன் மூலமாய் விண்ணப்பித்துக்கொள்கின்றோம்.

நேயர்களின் ஆர்டர்படிக்கு வி. பி. மூலம் அனுப்பப்படும் பார்ஸல்களை மூன்று தினங்களுக்குள் பணம் கட்டி வி. பி. யைப் பெற்றுக்கொள்ளக் கோருகின்றோம். இதை சிலோன் அன்பர்கள் முக்கியமாகக் கவனிக்கவேண்டுகின்றோம்.

மானேஜர்.

*தங்களுக்கு சம்மந்தமில்லாத சில விஷயங்களில் தலைப்பட்டு வீண் மிரட்டல் செய்து காலங்கழிப்பவர் அநேகம் பேர். அதில் ஏதேனும் கைலாபம் கிடைக்குமென்று எதிர்பார்த்து முடிவில் ஏமாறுவர்.*

# ஈச்வர ரகசியம்.

(மகாத்மா காந்தி.)



சகல பொருள்களிலும் வியாபித்திருக்கும்படியான சக்தி ஒன்று உண்டு. அது விவரிக்கப்படவும் அறியவும் முடியாதது. நான் அதைப் பார்க்காவிடினும் உணருகிறேன். எனது புலன்களால் அறியக்கூடிய எதற்கும் காணப்படாத அச்சக்தி மாறுயிருப்பதுந் தவிர எவ்வித பிரமாணங்களேயும் நிராகரித்துத் தன்னை உணரும்படி செய்கிறது. அது நமது புலன்களை அதிக்கிரமித்து நிற்கிறது. மிகச் சொல்ப அளவு வரையில் தான் அதன் இருப்புக்குக் காரணம் கூற இயலும்.

ஃ

சாமானிய விஷயங்களிலுங்கூட மனிதர் தங்களை எவர் எவ்வாறு என் ஆளுகிறார் என்ற விவரம் தெரியாதிருப்பது நாம் அறிந்த விஷயமே. என்றாலும், தங்களை ஆளும்படியான சக்தி ஒன்று கண்டிப்பாய் இருக்கிறதாக அவர்களுக்குத் தெரியும். சென்ற வருஷம் நான் மைசூரில் பிரயாணம் செய்தபோது எளிய கிராமவாசிகள் பலரைச் சந்தித்தேன். விசாரித்ததில் மைசூரை யார் ஆளுகிறார் என்ற விவரம் அவர்களுக்குத்தெரியாதிருந்ததை நான் உணர்ந்தேன். அவர்களை யாரோ ஒரு தேவதை ஆளுவதாக மாத்திரம் சொன்னார்கள். தங்களது அரசனைக்குறித்த அவ் வேழை மக்களது அறிவு அவ்வளவு அற்பமாயிருந்தது. அன்னோருக்கும் அவர்கள் அரசனுக்குமுள்ள சம்பந்தத்தைக் காட்டிலும் எனக்கும் கடவுளுக்குமுள்ள சம்பந்தம் மிகக் குறைவாகவே இருக்கிறது. அவ்வாறிருக்க யான் அரசர்க்கரசனை கடவுளின் இருப்பை அறியாததற்கு ஆச்சரியப்படவில்லை. ஃ

இவ்வுலகில் ஒழுங்கு நடைபெறுகின்ற தென்பதை நான் உணருகிறேன். உயிருள்ளவையு மில்லவையுமான பொருள்கள் அனைத்தையும் ஆளுந்தன்மை யுடைய, மாற்ற மடையாத சட்டம் ஒன்று இருந்து வருகிறது. ஃ

எல்லா ஜீவன்களையும் ஆளும் அச்சட்டமே கடவுள். சட்டமும் சட்டம் செய்தவரும் அவரே. சட்டத்தையும் சட்டம் செய்தவரைக் குறித்தும் நான் நன்கு அறியாததி னிமித்தம் அவர்களை மறுக்க மாட்டேன். லௌகிக (அரசர்) அதிகாரத்தின் இருப்பைப் பற்றிய எனது மறுப்போ, அன்றி அறியாமையோ எனக்கு எவ்வித நலத்தையும் தாராது. ஆனால், கடவுளையும் அவர் சட்டத்தையும் மறுப்பதினால் நான் அவர்களது காரியத்திலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாது. லௌகிக அதிகாரத்தை ஒப்புக்கொண்டால் அதன்கீழ் ஜீவியமும் சுலபமும் சௌகரியமுமாவது போன்று, தெய்வீக அதிகாரத்தைப் பணிவுடனும் சாந்தத்துடனும் ஏற்றுக்கொண்டால் ஜீவியப் பிரமாணம் சுலபமானதாகும். ஃ

என்னைச் சுற்றிலுமுள்ள ஒவ்வொரு வஸ்துவும் என்றும் மாற்றம் அடைந்து கொண்டும் அழிவடைந்து

கொண்டு மிருக்கிறது. இம்மாறுதல்களுக்கு அடிப்படையானதும் மாற்றமில்லாததும் எல்லாவற்றையும் ஒன்று சேர்ப்பதும், ஆக்கல், அழித்தல், மீளவும் ஆக்கல் செய்து வருவதுமான ஒரு ஜீவ சக்தியை நான் மங்கலாய்க் காணுகிறேன். தன்னை அறிவிக்கும் இச்சக்தி அல்லது ஆவேசமே கடவுள். எனது புலன்களுக்குக் கோசரமாகக் கூடிய எதுவும் நிரந்தரமாய் நிலை பெருததால் புலன்களால் காணப்படாத அவர் ஒருவரே என்றும் உளர். ஃ

இச்சக்தி உபகாரத் தன்மையுடையதா? அல்லது அபகாரியா? நான் அதை முற்றிலும் உபகாரத் தன்மை யுடையதாகவே காணுகிறேன். ஏனெனில், மரணத்தினிடையே ஜீவனும், பொய்யினிடையே மெய்யும், இருளினிடையே பிரகாசமும் நிலைத்து நிற்கின்றன. இவைகளால் கடவுள் ஜீவனும் உண்மையும் பிரகாசமுமெனக் கொள்கிறேன். அவன் அன்புவடிவானவர் அவரேஎல்லாவற்றிற்கும்மேலான நன்மையாவர்.

ஃ

ஐம்புலன்களால் ஏற்படக்கூடிய அனுபவத்தைவிட அதிக உண்மையானதெளிந்த அனுபவத்தாலேயே அவரை அறியக்கூடும். இந்திரிய ஞானம்எவ்வளவு உண்மையாய்க் காணப்பட்டபோதிலும் அநேகமாய் பொய்த்ததாகவும் நம்பத்தகாததாகவு மிருக்கின்றது. புலன்களுக்குப் புறம்பான அனுபவமே பிழை படாதது. இவ்வனுபவம் அன்னிய பிரமாணத்தால் ருசுவாகிறதில்லை. ஆனால், இது தம்முள் கடவுளின் வாஸ்தவ இருப்பை அறிந்தவர்களின் மாற்றுயர்ந்த குணம் நடத்தை இவைகளாலேயே ருசுப்படுகிறது. ஃ

இறுதியாகக் கூறப்பட்ட அத்தாட்சி எல்லா தேசங்களிலுமுள்ள முறிவுபடாத தொடர்பினரான தீர்க்கதரிசிகள், போதிஞர் ஆகியவர்களின் அனுபவத்தால் அறியக்கிடக்கின்றது. இவ்வத்தாட்சியை மறுத்துக்கூறல் ஒருவன் தன்னையே மறுப்பதாகும். ஃ

மேற்சொன்ன அனுபவம் பெறுவதற்கு முன்னர் அசைக்கப் படாத நம்பிக்கை ஏற்படவேண்டும். தன்னில் கடவுளின் சான்னியத்தைப் பரீக்ஷிக்கிறவன் நிலையான நம்பிக்கை கொண்டு அவ்வாறு செய்யவேண்டும். நம்பிக்கை அன்னிய பிரமாணத்தால் ருசுப்படாததுபற்றி உலகத்தின் சன்மார்க்க ஆளுகையிலும், உண்மையும் அன்புமயமான சன்மார்க்க சட்டத்தின் ஏகாதிபத்தியத்திலும் நம்பிக்கை கொள்ளுவதே பத்திரமான வழியாகும். உண்மைக்கும் அன்புக்கும் மாறுனவைகளை நிராகரித்துத் தள்ளி,முடிவாகத்தெளிந்த தீர்மானம் உண்டாகிற சமயத்தில் நம்பிக்கை கொள்ளுவதே மிகவும் பத்திரமானது.

---

ஒரு தொழிற்சாலையை நடத்தக்கூடிய மானேஜர் முன்பின் தங்களுக்குத் தெரிந்தவராயிருக்கலாம். தங்களுடன் ஒரு காலத்தில் வேலை செய்தவராகவுமிருக்கலாம். அவர் தமது இப்போதைய மானேஜர் பதவியில் கடமையைபழுதற கிரமமாய்க் கண்டிப்புடன் செலுத்த வேண்டிய கட்டாய நிர்ப்பந்தத்திற்குள்ளாயிருக்கிருர். ஆதலின் அவர் தமது விஷயங்களைக் கவனிக்கவில்லை என்று முணுமுணுத்துப்பேசுவது சரியாகாது. அவர்மீது கோபம்கொள்வதும் தவறு. ஆனல் பழய அன்பு நெஞ்சில் ஒருபக்க மிருந்துகொண்டிருக்குமாதலின் தருணம் கிடைத்தபோது உதவி செய்யவும் அவர் மறவார். M. D. N.

இவ்விஷயத்தைப் பிரமகண மூலமாய் ருசுப்படுத்த ஏதுவான எந்த வாதத்தையும் நான் அறியாததை ஒப்புக் கொள்கிறேன். நம்பிக்கையானது எவ்வித பிரமாணத்தையும் கடந்து நிற்கிறது. நம்மால் இயலாததைக் குறித்துப் பிரயத்தனிக்க வேண்டாமென்றே நான் கூறுவேன். உலகத்தில் தீமையின் இருப்புக்கு எந்த நியாயமான யுக்திக் கொத்தவழியிலும் காரணம் கூற என்னால் இயலாது. அவ்வாறு காரணம் கூறுவது நான் கடவுளுடன் சமத்துவம் கொண்டாடுவதாகும். ஆகையால், தீமை இத்தகைய தென்பதை மாத்திரம் தாழ்மையுடன் ஒப்புக்கொள்கிறேன். உலகில் தீமைக்கும் கடவுள் இடங் கொடுத்திருப்பதால் அவர் நீடித்த துயருறுகிறவரென்றும், பொறுமையுள்ளவரென்றும் திடமாகக் கூறுவேன். அவரிடம் தீமை இல்லையென்பது எனக்குத் தெரியும். ஆயினும், தீமை என்பதிருப்பதால் அதற்கும் கர்த்தா அவர்தான். எனினும், அதனால் அவர் பாதிக்கப் படாதவர்.

ஃ

எனது ஜீவனையே இழக்க நேர்ந்தாலும் இத்தீமையுடன் எதிர்த்துச் சண்டை செய்யாவிடில் கடவுளை அறிய முடியாதென்பதை நான் அறிகிறேன். மிகத் தாழ்மையும் அற்பமானதுமான எனது சொந்த அனுபவத்தாலேயே இந்நம்பிக்கை என்னிடம் பலப்பட்டிருக்கிறது. நான் எவ்வளவு பரிசுத்தனாகப் பிரயத்தனிக்கிறேனோ அவ்வளவுக்கவ்வளவு கடவுள் பக்கத்தில் இருக்கிறதாக உணருகிறேன். எனது நம்பிக்கை இப்போதிருப்பதைப்போல சர்வ சாமானியமானதாயிராமல் ஹிமாசல பர்வதத்தைப்போன்று அசைக்க முடியாததாயும், அதன் சிகரங்களில் காணும் பனியை யொத்து வெண்மையும் களங்கமற்றதாயுமிருக்கும் போது நான் கடவுளுக்கு எவ்வளவு அருகில் இருக்கவேண்டும்?

U. V. இராமஸ்வாமி நாயுடு.

## தீபாவளியும் கிருஷ்ண ஜயந்தியும்.

இவ்விரு விழாக்களும் தமக்கருகில் அமாவாசையை வைத்துக்கொண்டு வருகின்றன. அமாவாசையும், பௌர்ணமியும் வியாதிப்படுக்கையாய்க் கிடப்பவர்கட்குக் கனத்த அபாயநாட்களா யுள்ளன. பெரும்பாலார் இத்தினங்கள் நெருங்குமுன்னரோ, இத்தினங்களில்தானோ, அதற்கு மறுநாளோ மரண வேதனையின் வாய்ப்பட்டு விடுகின்றனர். தீபாவளி எவ்வளவோ பூரிப்பான பண்டிகை. ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தியோ அனைவரின் உள்ளத்தையும் கவர்வது. என் செய்யலாம்? தீமை கலவாத நன்மை இல்லைபோலும்!

உலக இயலுக்கு எந்தப் பெண்மக்கள் இன்றியமையாத துணையாயிருக்கின்றார்களோ, அந்தப் பெண்மக்களே பழிபாவங்களை யுண்டுபண்ணுவதற்கும் காரணமாயிருக்கின்றார்கள்.

# பழையன கழிதல்.



'தொன்மைய வாமெ வையும் நன்மையுமன்று, இன்று தோன்றிய வாமெவையும் தீமையுமன்று' என்றார் உமாபதிசிவம். முன்னேற்றத்திற்கான துறைகளிலிறங்கி, மக்கள் தீவிரமாக உழைக்க முனைந்து நிற்கும் பொழுது, அனுபவத்தில் சாத்தியமில்லாததும், உயர்நிலையையடைய எவ்விதத்திலும் துணை செய்யாததுமான பழக்கவழக்கங்களை கேவலம் 'பழமை' என்ற காரணத்தாலேயே தொட்டுக்கொண்டு நிற்றல் கூடாது என்பதும், ஒவ்வொரு வினாடியிலும் திட்டமாக முன்னேற்றத்தைக் காட்டும் சீரிய வழியை கேவலம் 'புதுமை' என்ற காரணத்தால் உல்லங்கனம் செய்தல் கூடாது என்பதும் மேற்சொன்ன வாக்கியத்தின் கருத்து. உலகத்தின் போக்கு எப்படி இருக்கிறது? அது எத்துறைகளில் முனைந்து நிற்கிறது? எம்முறையை மேற்கொண்டிருக்கிறது? இந்நிலையில் நமது நாடு என்ன செய்துகொண்டிருக்கிறது?; என்பதை விசாரித்து, அதற்கேற்ற ஓர் திட்டத்தை நிர்ணயம் செய்வதில் அடங்கி நிற்கிறது—பழையன கழிதலும் புதியன புகுதலும்.

ஃ

[பழயன கழிதலும்—என்பதனாலேயே பழமையை முற்றுமே ஒதுக்கி விடுவதென்பதல்ல. மதம், சாஸ்திர சம்பிரதாயங்களை அலக்ஷியம் செய்து, கண்டபடி திருத்தியும், புது அர்த்தமும் புதுவழியும் கற்பித்துக்கொள்வதென்பதுமல்ல. பழமையை அப்படியேவைத்துப் புதுமையாகிய திருத்தத்தை அப்பழமையுடன் கலந்து செழிக்கும்படிசெய்தலேயாகும். ப-ர்]

ஃ

உலகம் முழுதும் உள்ள நாடுகள் தத்தம் வியக்கத்தக்க முறையில் கடனாற்றிவருகின்றன, "இராஜீயம், பொருளாதாரம் ஆகிய இரு பெரிய துறைகளில் அந்நியருக்கு இடங்கொடோம்" என மறுத்து அக்கொள்கையை நிலைநாட்ட உயிரையும் விடத்துணிந்து நிற்கின்றன. சிறு நாடுகள் யுத்தத்தை வெறுக்கின்றன; சமாதானத்தை நாடுகின்றன. சங்கங்கள் காண்கின்றன.

ஃ

[இவ்விதம் பிறர்க்கு இடந்தராது மறுக்க அரசியலில் இந்தியர் எவ்வித சுதந்திரமும் பெற்றிருக்கவில்லையே? சுதந்திரத்திற்கு உழைத்த காங்கிரஸும் தற்போது சட்டவிரோதமானதாகக் கருதப்பட்டுவிட்ட நிலையில் யாதுதான் செய்ய இயலும்? ப-ர்.]

ஃ

ஆனால், இத்தகைய பெருவிழிப்புடன் ஏனைய நாடுகள் கடனாற்றிக்கொண்டிருக்க, நம் தாய் நாடு என்ன செய்துகொண்டிருக்கிறது? பெண்மக்கள் கல்வி கற்கலாமா?-நாம் செய்யப்புகும் அல்லது கூறும் காரியம் சாஸ்திரத்தையொட்டி இருக்கிறதா?—சம்பிரதாயத்தை அனுசரித்திருக்கிறதா?—மதத்தைத் தழுவி நிற்கிறதா?—என்றெல்லாம் ஆலோசனை செய்துகொண்டிருக்கிறது. சாஸ்திரம்,

சம்பிரதாயம், மதம், ஆகிய இவைகளெல்லாம் மனிதனுக்காக உண்டாக்கப்பட்டிருக்கின்றனவேயன்றி, மனிதன் அவைகளுக்காக உண்டாக்கப்பட்டிருக்கவில்லை.

ஃ

[திலக்காகவே குல்லா ஏற்பட்டதெனினும், அக்குல்லாவை மதித்துப் பத்திரமாய்ப் பாதுகாத்தால்தான் அது அவனுக்கு உதவியாக நிற்கும். அவ்விதமே, மதம் சாஸ்திரங்களில் பக்தி வைத்து நடந்தால் க்ஷேமப்படலாம். அவற்றை ஏதோ சாமான்யமாக நினைத்துக் கண்டவாறெல்லாம் மனம் போலத் திருத்திக்கொள்ளலாமென்று மீறி நடத்தல் ஸர்வ நாசமாகிய ஒழுக்கக்கேட்டிற்கும் அழிவுக்குமே கொண்டு செல்லும். எப்போதோ ஓர் காலந்தன்னில் யாவருங்கூடி ஏகோபித்து நின்று ஒரு அவசியமான காலோசிதத் திருத்தத்தை மதம்—சாஸ்திரங்களிற் செய்யலாம். அதிலும் ஒரு எல்லை, ஒரு ஒழுங்கு இருக்க வேண்டும். ப-ர்.]

ஃ

தாய் நாடு பல நூற்றாண்டுகளாக தன் வளப்பம் இழந்து நிற்கிறது. மக்கள் 'பாழுஞ் சோற்றுக்கே வந்ததடா பஞ்சமே' என்று ஏங்கி நிற்கின்றார்கள். அவர்களை அச்சம், ஆண்மையின்மை, வறுமை, பிணி ஆகிய கரும் பூதங்கள் சூழ்ந்து வாட்டுகின்றன. இந்நிலையில், 'இச்செயல் சாஸ்திரத்திற்கு, சம்பிரதாயத்திற்கு, மதத்திற்கு, ஒத்திருக்கிறதா?' என்று ஆராய்ச்சி செய்வதில் வீண் காலஞ் செலவிடுவது அறிவுடைமையாகாது'

ஃ

[வறுமையும், பிணியும், ஆண்மையின்மையும் மத சாஸ்திரங்களை நம்பி யனுஷ்டிப்பதால் ஏற்பட்டுவிடவில்லை. அரசியலில் போதிய நிர்மாணங்களும், அபிவிர்த்திக்கான பல ஸ்தாபனங்களும் இன்மையே அதற்குக் காரணம். நம்மவர்களின் ஒன்றுபடாத புத்தியும் மற்றொரு காரணமாகும். ப-ர்.]

ஃ

புதுமை காண்போர் கூறுவதென்ன? 'மனிதனை மனிதன் தாராளமாக நேசிக்கட்டும். அவன் துயருறுங் காலத்தில், உண்டியால், உடுக்கையால் உதவட்டும். எக்காரணங்கொண்டும், உயர்வு தாழ்வு கற்பித்தல் வேண்டா. தாழ்ந்தவனைக் கைதூக்கிவிடாதவரையில், உயர்ந்தவனென்று கூறிக்கொள்பவன் உயர்ந்தவனாகமாட்டான். கூட்டத்தில் அழைத்துக்கொண்டு போ. கொண்டாட்டத்தில் கலக்கவை. துயரத்தில் பங்கு கொள். அதன் மூலம் பரஸ்பர சகோதர உணர்ச்சி, அன்பு உயர்குணம், ஆகிய இன்னவும் பலவும் ஒருங்கே உதயமாகும் என்பன.

ஃ

[இங்ஙனம் வெளியில் பெருமைபடக் கூறியவாறே, உள்ளுக்கு முற்

---

ஒருவர் தனக்கு மேலுள்ளவர்களிடத்தில் எவ்வளவோ பயந்து வேலையை நடத்திக்கொண்டு போனாலும், அதை உண்மையில் தெரிந்தும் தெரியாத பாவனையாகவே காட்டிச் சரிவர வேலைகள் செய்யவில்லையென்று வீண் குற்றம் கண்டு மிரட்டுகிற பழக்கம் சிலருக்கு உண்டு. சிலர் இவர்களுக்குமேல் பேசக் கூடியவராகவும் கண்ணை சிமிட்டுகிற தருவாயில் மூன்று வழி வரக்கூடியவராயிருந்தால் அவர்கள் செய்யும் பிசகு தெரிந்து இருந்தும் கெருடனை கண்ட பாம்புபோல் பதுங்குவார்கள். இப்படியும் சிலருடைய சுபாவம். M. D. N.

றும் சுயநலமாய்ப் பதவி கௌரவங்களை விரும்பி ஒழுகும் 'புதியன புகுந்த' மார்தரே அதிகமாவர். பழமையை முற்றிலும் தூற்றிப் புதுமையையே பெரிதும் போற்றினோர் சுயநலந்துறந்த உபகாரிகளாய் உத்தமர்களா யிருந்தது மிகச் சொற்பத்திலும் சொற்பமே. ப-ர்.]

ஃ

'பழைமை'யில் நிற்போர் அவலம்பிப்பதென்ன? "அன்னம், ஆடை முதலியவைகளைக் கொடுத்து ஒவ்வும் வகையால் உதவி செய். தீண்டலும் காண்டலும் ஒவ்வாதன. அவனவன் செய்த புண்ணிய பாவங்களுக்கேற்ப, சமூகத்தில் அந்தஸ்து பெற்றிருக்கிறான். எவ்வெவ்விடத்தில் எதுவரையில் செல்லலாமோ, அதுவரையில் தான் செல்லலாம். ஏனையவைகள் கடவுளுக்குச் சம்மதமில்லாதவைகள்" என்பவைகளே.

ஃ

[கடவுளுக்குச் சம்மதமில்லாதவைகள் என்று எவரும் சொல்லவில்லை. கடவுள் என்பது ஒரு குறித்த இடத்தின் எல்லை. அந்த இடத்தையடைவதற்கு வெவ்வேறு வழிகளான மதங்கள் தோன்றியுள்ளன. அந்தந்த மதத்திலிருப்போர் அந்தந்த மதக் கட்டளைகளை மீறாது நடக்கவேண்டுமென்றே பழமை பகர்கின்றது. மருந்துக்குத் தகுந்த பத்தியவிதிகள் ஏற்படுவதுபோல், அந்தந்த மதத்திற்குத் தகுந்தவாறாகக் கட்டுப்பாடுகளும், அனுஷ்டானங்களும் விதிக்கப்பட்டுள்ளன. ப-ர்.] ஃ

முன்னையது ஆக்கமுறை; பின்னையது அழிவு முறை.

ஃ

[ஒருபோதும் அழிவுமுறையல்ல. பழுதுற்ற சிலவற்றைத் திருத்திக் கொள்ளலே அறிவுடைமை. மனிதர் திருத்தாமலே, 'காலம்' என்பது பலவற்றைத் திருத்தியுமிருக்கிறது. ப-ர்.]

ஃ

பொதுநல முன்னேற்றத்திற்கு உழைப்பதற்கென இரு பெரிய ஸ்தாபனங்கள் தோன்றியுள்ளன. அவைகளில், இராஜீயம், பொருளாதாரம் ஆகிய இரு பெரிய துறைகளில் தொண்டுபுரியக் கங்கணம் கட்டி நிற்பது தேசிய மஹாசபை யென்பதொன்றும், சிதறுண்டிருப்பினும் ஒரே கொள்கையைப் பல துறைகள் மூலம் பரப்புவதுடன், வேற்றுமை உணர்ச்சியைக் களைந்து, ஒற்றுமை உணர்ச்சியை வளர்த்து, உண்மைத் தொண்டு புரியும் சமூக ஊழியச் சங்கங்களென்பதொன்றுமே. ஒன்று மற்றொன்றினுக்கு அரண் செய்து நிற்பது. ஃ

ஒவ்வொரு யுகத்திற்கும் ஒவ்வொரு தருமம் உண்டு. அதனை யுக தருமமென்பர்; இந்த யுகத்தின் தருமமாவது:—சுதந்திரம், சகோதரத்துவம், சமத்துவம் ஆகியவைகளே. இத் தருமங்கள் பல்லாண்டுகளாகப் பல தேசங்களில் சிறையில் நாட்டிற்கெனத் தவம்புரிந்த தூய தொண்டர்களால் வகுக்கப்பட்டவைகள். இத் தருமங்களின் ஸ்தாபனார்த்தம்

---

சில பத்திராசிரியர்கள் ஒன்றை மனதில் வைத்துக்கொண்டு தாங்கள் நடப்பது ரொம்பவும் நியாயம், மற்றவர்கள் நடப்பது அநியாயம் என்று எண்ணி தங்களுடைய பேனா முனையைப் பலவாறாக நீட்டி எழுதுவதுமுண்டு. தன் குற்றம் தான் அறியாததே உலகில் அதிகம். (ஒரு நிருபர்)

தொண்டர் பல்லாயிரவர் சூழ்ந்து நின்றனர். நாட்டின் மேன்மை கருதி எவ்வித இன்னலையும் பொருட்படுத்தாத கருமயோகிகள் அவர்கள். அத்தகைய அறிஞர் வழியில் மூட்டுக் கட்டைபோட அருத்தமற்ற பழைமையில் நிற்போர் கனவிலும் கருதாமலிருப்பார்களாக!

ஃ

[தம் நாட்டிற்காக அவ்வத்தேசங்களில் தொண்டுபுரிந்த அறிஞர்கள் பலரும் தம் நாட்டின் பழமையைப் பக்தியுடனே போற்றிக் காத்து, அத்துடன் கால இயல்பையொட்டிச் சில புதுமைகளையும் ஏற்றிடும் சிந்தையரா யிருந்தனரேயன்றி, அன்னோர் ஒருபோதும் பழமையை 'அருத்தமற்ற'தெனப் பழித்துப் பகைத்தவரல்லர். ஐரோப்பியர் பல தேசங்களில் ஸஞ்சரிப்பினும், தமது தேச நாகரீக நடையுடை பாவனைகளையும், தங்களின் பழமையையும், புராதனமான தமது தொப்பியையும் நாளைக்கும் விட்டவராயில்லை. ப-ர்.]

ஃ

பிறப்பினுல் உயர்வு தாழ்வு கற்பித்தல்; தொழிலின் தூய்மையை ஏற்க மறுத்து, தொழிலாளர்களைக் கௌரவப்படுத்தாதிருத்தல்; சமரசம் பரவ, சாந்தம் நிலவ்க்க, அன்பு வேரூன்றும் விதம் மனதை விஸ்தாரப்படுத்தாதிருத்தல் ஆகிய இவைகளே 'பழைமையில் நிற்றல்' எனப்படும்.

ஃ

[பிறப்பினுல் உயர்வு தாழ்வு கற்பித்தல் பழமையிலும் புதுமையிலும் எங்கும் உண்டு. 'கலப்பு' வகுப்பைத் தழுவிய ஆங்கிலோ இந்தியருக்கு இங்கிலாந்திலிருந்தும் சுத்தமான ஆங்கில வகுப்பைச் சேர்ந்த பெண்ணைத் தர ஏற்பாடாகி, அப்பெண்ணும் இந்தியா வந்து சேர, இங்குள்ள ஆங்கிலப் பெரியார்கள் ஆங்கிலோ இந்தியருக்குத் தர மறுத்து அப்பெண்ணை மீண்டும் இங்கிலாந்துக்கே கப்பலேற்றி அனுப்பிவிட்ட சம்பவம் சமீபகாலத்தில்தான் நடந்தது. பிறப்பினுல் உயர்வு கொண்டாடுதல் எங்கும் உண்டு. தொழிலையும் தொழிலாளரையும் பழமையானது ஆதரித்தது போல் புதுமையானது ஆதரிக்கவேயில்லை. சமரஸம்—சாந்தம்—அன்பு—மன விரிவு இவற்றைப் பழமையானது வளர்த்து வந்ததற்கு இந்திய நாடு முழுதுமே சாக்ஷி சொல்லும். வீணே பழமையைத் தூற்றுதல் சரியாகாது. ப-ர்.]

ஃ

தொழில் தூய்மையானது. அது ஒன்றே முன்னேற்றத்தின் அடிப்படை. அதனைச் சிறந்த முறையில் ஆற்றுவோன் சமூகத்தின் அச்சாணி. எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் ஓர் இனம்; எல்லாரும் ஓர் விலை" என்ற உணர்ச்சியுடன் ஊழியம் ஏற்றலே, 'பழையன கழிதல்' எனப்படும்.

ஃ

['பழமை'யானது தொழிலின் தூய்மையையும், அதன் முன்னேற்றத்தையும் ஹிந்து அரசர்கள் ஆட்சியிலும், மொகலாய மன்னர்கள் ஆட்சியிலும் பொன்போல் போற்றி வளர்த்துச் சென்றவாறுகவே இருந்திருக்கிறது. வாஸ்கோடிகாமா என்பவர்

தங்களுக்கு சம்மந்தமில்லாத சில விஷயங்களில் தலையிட்டு வீண் மிரட்டல் செய்து காலங்கழிப்பவர் அனேகம்பேர். அதில் ஏதேனும் கைலாபம் கிடைக்குமென்று எதிர்பார்த்து முடிவில் ஏமாறுவர்.

1498-ம் வருஷம் மேமீ 11-ம்வ கள்ளிக்கோட்டைக்கு வந்து சேர்வதற்கு முன்பு இந்தியாவில் கிறிஸ்துமதம் இல்லை; மொகலாயர் படையெடுப்புக்குமுன்பு இஸ்லாம் மதம் இந்தியாவிலில்லை. முழு இந்தியாவிலும் ஹிந்து மதமும் அதன் கிளைகளுமே இருந்து யாவரும் ஹிந்துக்களாய் எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் இனமாகவே அந்தப் பழமையின் காலத்தில் வாழ்ந்துவந்தனர். எல்லோரும் ஓர் இனமாவதைப் பழமையானது ஆதரித்தே வந்திருக்கின்றது. ஒரு மாகாணத்தினர் மற்றொரு மாகாணத்தினரைச் சந்திக்கவே காசி ராமேஸ்வர யாத்திரையும், பல ஊரார் ஒன்று கூடுதற்காகவே ரதோத்ஸவங்களும், 12-வருஷங்கட்கொருமுறை யாவரும் ஒன்றுசேர்தற்காக மகாமகம், கும்பமேளா முதலிய தீர்த்தோத்ஸவங்களும் இன்னும் இதுபோன்ற பலவற்றையும் பழமையானது புரிந்து எல்லோரையும் ஓர் இனமாக்க எவ்வளவோ முயற்சி செய்துளது. மனைவியும் மகளும் ஓரே பெண்ணுருவாயினும், இருவரையும் ஒன்றாக நோக்கிவிட ஒண்ணாது. உலகக் கிரம முறைப்படியே மனைவியிடத்து ஒருவிதமாயும், மகளிடத்து ஒருவிதமாகவுமே நடந்துகொள்ளவேண்டும், இவ்விதமே, எல்லோரும் ஓர் இனமேயாக மாறுவதும் கோள்ளத்தக்க அவசியமான ஓர் முக்கியப்பொழுதில் மட்டுமே கொண்டுவிட்டு, பிறகு உலகக் கிரம முறைப்படி வெவ்வேறாக அந்தந்த இனவரிசைக் கிரமமாக ஒழுக வேண்டியதாகவே இருக்கும். ப-ர்.]

ஃ

"புதியன புகுதலும், பழையன கழிதலும் வழுவல காலவகையினானே".

(நன்னூல்)

வி. தேவாச்சாரியார்.

ஃ

[நன்னூலியற்றிய பவணந்தி முனிவர் பழய இலக்கணத்தை அப்படியே வைத்துக்கொண்டு அதில் புதுத் திருத்தங் கண்டனரேயன்றி, பழமையை யடியோடு ஒழித்துப் புதியதைத் தழுவி நூதனமாக வேறு இலக்கணத்தை இயற்றிவிடவில்லை. பழமையையே பழுது திருத்திப் பலப்படுத்தினர். காவிரியாற்றில் பல கிளை நதிகள் சேரலாம்; அதனால் காவிரி இன்னும் விசாலமுள்ளதாகலாம். அவ்வளவேயன்றிக் காவிரியையே அடைத்துவிடவோ, வேறு நதியாகச் செய்துவிடவோ ஒருபோதும் கூடாது. காவிரி என்றும் காவிரிநதியாகவே இருக்கவேண்டும். அதில் திருத்தங்கள் மட்டும் செய்யலாம். கைவிரலில் காயம்பட்டால் காயத்தை ஆற்றி விரலைக் குணப்படுத்தவேண்டுமேயன்றி விரலைத் துண்டித்துவிடுவது கூடாது. அவ்விதமே, மதத்திலும், சாஸ்திரங்களிலும், பழமையிலும் —யாவரும் ஒப்பமுடிந்த புதுமையான திருத்தங்களைக் காலஇயல்புக்கிணங்க ஏற்றுச் சேர்த்து வளர்ச்சிகொள்ள வைக்கலாமேயன்றி, அவற்றை அடியோடு இகழ்ந்து விலக்கி, முற்றிலுமே புதுமையை ஏற்பதென்பது எதிராறு நீந்துதற்கே ஒப்பாகும். அது தக்கதோர் செய்கையுமன்று ப-ர்.]

---

மானேஜராய் இருக்கக்கூடியவர் தொழிலாளியுடன் கலந்து வேலை செய்துகொண்டுபோக ரொம்பவும் சந்தோஷப்படுகிறார். ஆனால் தொழிலாளிகளோ மானேஜருடன் கூடக்கலந்து வேலை செய்தால் அதிகமான உழைப்பு உழைக்க வேண்டியிருக்குமென்றுப் பின்னடைகிறார்கள். தங்களின் அந்தரங்க ஊழல்களை எங்கு மானேஜர் கண்டுவிடுகிறாரோ என்ற ஏக்கமும் வேறே.




## கடவுளின் மௌன விசித்திரம்.



இன்று கூடிய நமது கடையில் தொந்திச் செட்டியார் கடவுளின் மௌனநிலையைக் குறித்து ஒரு பெரிய பிரஸங்கம் செய்தார். "கடவுளை யாவரும் கருணைக்கடல் என்கிறார்கள். அவர் தமது பக்தர்களையும், தம்மையே கதியென நம்பியவர்களையும் கைவிட்டதில்லை என்கிறார்கள். இவற்றை நான் மறுக்கவில்லை. என்றாலும், பல காலங்களிலும், பகவான் மௌனநிலை சாதித்து விடுகின்றாரென்பதற்கு எத்தனையோ உதாரணங்கள் தரலாம். சிக்ஷிக்கவேண்டிய தெய்வம் இவ்விதம் மறைந்து விடவே, துஷ்டர்களின் அக்கிரமங்கள் எல்லை கடந்து ஓங்கி விடுகின்றன. நல்லோர் கதறிப் பிரலாபிக்கின்றனர். கடவுளின் அருளோ ஆறுதலோ உத்தமர்கட்கு உடனே கிட்டுவதில்லை. கடவுளின சக்தி எங்கோ கண்காணாது ஓடி ஒளிந்து விடுகின்றது. இதற்கு இங்கே ஒரு உதாரணம் தருகிறேன்.

ஃ

தினக்கும் தன்னைச் சேர்ந்தவர்களுக்கும் உண்மையில் உழைத்துத் தன்மீது எவ்வளவோ அன்பாயிருக்கும் தன் குமாரனையே தாய் பகைக்கிறாள். அவளுடைய பிரியம் தன் குமாரத்தியின் இரு குழந்தைகள் மீதும் தாவி விடுகின்றது. தன் குமாரன் சுகமே வாழ்வதில் அன்னைக்கு அத்தனை சிரத்தையில்லை. தன் பேரப்பிள்ளைகள் க்ஷேமமாயிருக்கவேண்டு மென்பதிலேயே பெரிதும் கவலை கொள்கிறாள். தன் பேருக்கு இருந்த வீட்டைத் தன் குமாரன் பேருக்கு முன்பு எழுதி வைத்துவிட்டதற்காக மிகுதியும் மனம் நொந்து போகிறாள். மறுபடியும் தன் குமாரனிடமிருந்து அவ்வீட்டைக் கைப்பற்ற என்னென்ன சூழ்ச்சி தேடலாமென்று யோசிக்கின்றாள். வீட்டுப்பத்திரங்களை ஒரு முக்கியஸ்தருக்குக் காண்பித்துவிட்டுக் கொண்டு வந்து கொடுப்பதாய்த் தன் குமாரனிடம் நயவஞ்சகமாகக் கேட்கிறாள். மாதாவையே முற்றிலும் நம்பியுள்ள சத்தியவர்தனன குமாரன் அவ்விதமே வீட்டுப்பத்திரங்களைத் தன் அன்னையிடம் தருகின்றான். பிறகு பத்திரங்கள் திரும்பி இவன் கைக்கு வருவதேயில்லை. தாயார் அதை வேறிடத்தில் பத்திரப்படுத்தி விடுகிறாள். தன் குமாரனுக்கு வீட்டை எழுதி வைத்து விட்டபோதிலுங்கூடத்தான் இஷ்டப்பட்டால் வேறு எவருக்கும் எழுதிவைக்கத் தனக்கு சுதந்திரமுண்டென்று தாய் சொல்லிக்கொள்கிறாள். அதைக் குமாரனும் உண்மையென்று நம்பிக்கொள்கிறான்.

ஃ

தாய் இவ்விதம் மனம்மாறி, தன் குமார்த்தியின் பிள்ளைகளுக்கு அதிக செல்வாக்கு தருகிறாள். அந்தப்

பேரப்பிள்ளைகள் இந்தக் குமாரனை எதிர்த்துப் பகைக்கின்றனர். குமாரனே தன்னை எதிர்த்து மீறியவர்களை வீட்டை விட்டுப்போவென்று சொல்லுகையில், அவர்கள் "உன் வீடா" என்று இவனைத் திருப்பிக்கொண்டு கேட்கின்றனர். அவர்கள் அவ்விதம் தன்னைக் கேட்கலாமாவென்று இக்குமாரன் தன் தாயினிடத்துச் சொல்லுகையில் அவள் அதற்குப்பதில் பேசாமலே ஜாடையாக இருந்து விடுகிறாள். ஃ

இக்குமாரன் தன் மனைவியோடும் ஒரு ஊருக்குச் செல்லுகையில் தனது சமையலறையைப் பூட்டிச் செல்ல முயல்கிறான். அதற்குத் தாய் ஓ! நீ பூட்டக்கூடாது; உனக்குச் சுதந்திரமில்லை யென்கிறாள். குமாரன் அவ்விதமே அந்த அறையைத் திறந்து வைத்துவிட்டு மௌனமாக ஊருக்குச் செல்லுகிறான். பிறகு மற்றொரு சமயம் தன் மனைவியின் பிரசவத்திற்கு ஒரு அறை கேட்கிறான். அதற்குத் தாய் தருவதற்கு மறுத்து விடுகிறாள். மறுத்த சமயமோ இரவு 3-மணி. அந்த நேரத்தில் அவன் மனைவி பிரஸவவேதனைப்பட்டு அலறித் துடிக்குங் காலமாயுள்ளது. அவள் நோய் தாளாது கதறிக் கிடக்கும்பொழுது தான் அவளை எங்கு அழைத்துச் செல்வதென்று குமாரன் தன் அன்னையிடம் மிகமிகக் கெஞ்சுகிறான். தாயோ ஒரே பிடிவாதமாய், எந்த அறையும் தரமுடியாதென்றும், தான் அருகிலிருந்து கவனிக்க முடியாதென்றும் கண்டிதமாய்க் கூறிவிடுகிறாள். அதன்பின் நொந்து துடிக்கும் தன் மனைவியை வெகுகஷ்டத்துடன் வண்டியிலேற்றி நான்கு மைல்களுக்கு அப்பாலுள்ள அவள் அன்னையின் வீட்டில் கொண்டு போய்ச்சேர்க்கிறான். அங்கு போய்ச்சேர்ந்த அரை மணி நேரத்திற்குள் குழந்தை பிறந்து விடுகின்றது. இந்த ஸம்பவம் வண்டியிலேயே நேரிட்டிருப்பின் எவ்வளவு அலங்கோலமாகிவிடும்? எத்தனைக் கேவலமும் அவமானமும் ஸம்பவிக்கும்? ஃ

பிறகு மற்றொரு சமயம் இக்குமாரனின் குழந்தை வைசூரியினால் வருந்துகின்றது. அங்கு ஒருபலகணியின் வாயிலாகக் காற்று வருவது சௌகரியமாயிருக்க, அதை இந்தப் பேரப் பிள்ளைகள் மூடிவிட்டு, ஓ! பலகணி மூடப்பட்டுத்தான் இருக்க வேண்டும்; திறக்கக்கூடாது என்கிறார்கள். இன்னும் இதுபோன்ற சிறுமைகள், பாடுகள், கேவலங்கள் எத்தனை எத்தனையோ! "பாவி மகன் படுந்துன்பம் பார்க்கோணுதே" என்றொரு புலவர் பாடியது இங்கு நன்கு பொருந்தி விடுகின்றது!

ஃ

இவ்வளவுக்கும் இந்தக் குமாரனின் பேருக்கேதான் வீடு இருக்கின்றது. இவனேதான் அந்த வீட்டிற்கு ஸர்வ சுதந்திர அதிகாரி. ஆனால், தானே அதிகாரி யென்பதையும், தனக்கே பூரண சுதந்திர முண்டென்பதையும் அவன் உணர்ந்து கொள்ளாத அஞ்ஞானமே அவனை இவ்வளவு துன்பமும் படவைக்கின்றது. தனது பலம், தனது சக்தி எவ்வளவென்பதை அக்குமாரன் அறியாமற் போனதினாலேயே இத்தனை தொல்லையும் காண நேர்கின்றது.

(மறு ஸஞ்சிகையில் முடிவு.)

'பஷநார்' பொன்வண்டு செட்டியார்.

---

நற்குணமுடைய சகோதரர்கள் என்றும் பிரிவதேயில்லை. தமது மனைவியின் தங்கையைத் தமது சகோதரனுக்கு மணமுடிப்பித்து சகோதரன் தம்மைப் பிரியாதிருக்குமாறு செய்துகொண்டோரும் உண்டு.

# சென்றமாதம்

**கனத்த பிளவுகளின் முடிவு:—**

வட்டமேஜை மஹாநாட்டில் ஹிந்து—முஸ்லிம் வேற்றுமை பெருகியது. அதன்பின் தீண்டாதார் ஹிந்துக்களைவிட்டுப் பிரியும்படியாகுமோ வென்ற கலக்கமும் தந்தது. மகாத்மாவினது உண்ணாத விரதத்தின் பயனாக ஹரிஜனங்களும் ஹிந்துக்களும் ஒன்றுபடுவதாயினர். அப்பால், ஹிந்து-முஸ்லிம்-பிணைவை அலகாபாத் மஹாநாடு சமரஸப்படுத்தி, அசைக்க முடியாத ஐக்கியத்திற்கு விதையூன்றிவிட்டது. இனி மூன்றாவதாக, இந்தியாவிலிருந்தும் பர்மாவைப் பிரித்துவிடும் இயக்கம் மிக வியாபகமுடையதாகஇருந்து வந்ததை, சமீபத்தில் பர்மாவில் நடந்த தேர்தலில் பர்மாவின் பிரிவினை வேண்டாத கட்சியினர் பெற்ற அதிக ஓட்டுகளானது மாற்றிவிட்டது. பிரிவினைப்பேச்சையே எடுக்க முடியாதபடி அது செய்துவிட்டது. இந்த மூன்று கனத்த பிளவுகளும் இத்துணைத் துரிதத்தில் மறைந்தமை ஜனஸமூகம் பெற்று வருகிற ராஜீயஞான பக்குவத்தைக் குறிப்பிடுவதாகும்.

ஃ

**மௌலானா ஷவுகத்அலி:—**

இப்பெரியார் லண்டனிற் செய்த பிரஸங்கமொன்றில், அலகாபாத்தில் ஏற்பட்ட ஸமரஸ முடிவானது இந்தியாவிலுள்ள முஸ்லிம்களில் 100-க்கு 90-பங்கு பேர்களின் பிரதிநிதிகளால் செய்யப்பட்டதென்றும், ஹிந்து—முஸ்லிம்—சீக்கிய ஒற்றுமை ஏற்பட்டு இந்தியர்கள் ஒரு ஜனமாக உருவாகி விட்டார்களென்றும் கூறினார். அங்ஙனமே ஆவதாக.

ஃ

**சாரதா சட்டத்தில் ஒரு சந்து:—**

11-வயது பெண்ணுக்கு விவாகம் நடந்ததான வழக்கொன்றில், அந்த விவாகம் புதுக்கோட்டையில் நடந்ததைக் காரணமாகக் கொண்டு வழக்கு தள்ளப்பட்டதாகத் தெரிகிறது. பிரிட்டிஷ் இந்தியாவின் எல்லையைத் தாண்டி விவாகம் நடத்தித் தப்பித்துக்கொள்ள ஒரு சிறு சந்து இருப்பதுபோல் இதனால் வெளியாகிறது.

ஃ

**காரிய சம்பந்தமும், செயல்களின் இறுதி லக்ஷ்யமும்:—**

மகாத்மாஜி ஒரு பத்திரிகா நிருபரிடம், தமது வாழ்க்கையிற் செய்யப்படும் பல காரியங்களும் வெவ்வேறு விதமானதாய்ப் பிரிக்க முடியாமல் ஒன்றுடனொன்று சம்பந்தித்ததாகவே இருக்கின்றனவென்றும், தமது ஸகலமான செயல்களும் ஒரே ஒரு உற்பத்தி ஸ்தலத்தினின்றுமே தோன்றுபவைகளாமென்றும், அச்செயல்கள் பெரியனவோ சிறியனவோ எவ்வாறிருப்பினும், சத்தியமும் அஹிம்ஸா தர்மமும் நன்கு ஊன்றப்பெறவேண்

---

எவ்வளவு அந்நியோந்நியமாயிருப்பினும் ஒரு சிறு சுடு சொல் உடனே பிரித்துவிடுகின்றது. அச்சொற் கேட்டோர் பிறகு சந்திக்க நெருங்குவதேயில்லை. பிறகு என்ன சமாதானப்படுத்தினும் அச்சுடுமொழியை அவர்கள் மறப்பதில்லை.

டுமென்ற நமது தணியாத ஆர்வத்தி லிருந்துமே அச்செயல்களனைத்தும் எழுகின்றனவா யுள்ளனவென்றும் கூறினர். ஃ

ஒரு சமயோசித எச்சரிக்கை:—

"கோவில் சாவி வைதீகர்களிடத் திலேதா னிருக்கிறதே தவிர நம்மிட மில்லை யாதலால், வைதிகர்களை வைவதையும் ஏளனம் செய்வதையும் விட்டு, எவ்வளவுக்கு ஈனமாய் அவர் களைச் சொல்லாதிருக்கிறேமோ அவ் வளவுக்கும் நல்லதே யாகுமென்றும், நமது ஆலயப் பிரவேசக் கிளர்ச்சிக்கு வைதீகர்களின் அனுதாபம் கிடைக் கும்படியாக முயலவேண்டுமென்றும்' ஸ்ரீமான் சக்ரவர்த்தி ராஜகோபாலாச் சாரியார் திரிச்சியில் கூறினர். இந்த எச்சரிக்கை மிகவும் சரியானதே. ஹரிஜனங்களின் ஆலயப் பிரவே சத்தை ஆதரிப்பவர்களும், அந்தப் பிரவேசத்தால் புராதனமான ஆலயங் களின் புனிதத்திற்குப் பங்கம் நேர்ந் துவிடுமே யென்று எதிர்ப்போரும் ஆகிய இருசார்பினரும் மிகமிகப் பெரி யோர்களும், தூய்மையான ஹிரு தயம் வாய்ந்தோருமேயாவர். ஆத லின் ,நிதான வார்த்தைகளில் பிரவேச எதிர்ப்பினரான வைதீகர்களும் கால சக்கரச் சுழலில் பல பல விட்டுக் கெட்டுத் தவறியிருப்பதை விளக்கி, அனுதாப வழியில் அவர்களின் உள் ளம் திரும்பச் செய்வதே தக்கதாகும். ஃ

மகாத்மாவின் உபவாசம்:—

குருவாயூர் கோயிலை ஹரிஜனங்க ளுக்கு ஜனவரிமீ 1-ம் தேதிக்குள் திறந்துவிடாவிடில் 2-ம் தேதி முதல் மகாத்மா வெறும் ஜலம்மட்டுமே அருந்தி உண்ணுவிரதம் அனுஷ்டிக் கப் போகின்றூர். இதற்கு முன் னிருந்த உபவாசம் ராஜீய விஷயமாத லின் ஒரு விதமாய் சமாஸங்கொண்டு விட வழி ஏற்பட்டுவிட்டது. இப் போதைய உபவாசமோ மதசம்பந்த மான பெரிய காரியம். திடீரென்று ஆலயப் பிரவேசத்தை ஒப்புக்கொள்ள வைதீகர்களும் கோயில் அதிகாரி களும் அவ்வளவுக்கு விட்டுக்கொடுக் கும் மனத்தெளிவும் பக்குவமும் பெற்றிருக்கவில்லை. குருவாயூர் ஆல யம் புராதனமும் புனிதமுமுடையது. வைதீகர்களும் கோயில் அதிகாரி களும் மஹாத்மாவின் பிராணனைவிட, ஹரிஜன ஆலயப் பிரவேச எதிர்ப் பையே பிரதானமாக நினைத்துப் பிடி வாதம் கொண்டுவிட்டால் மகாத்மா வின் உயிர் என்ன விபரீதத்திலா குமோ! முடிவு எவ்வாறே? ஈசன் செயல்!

---

"நமது சக்திக்கு மீறிய டாம்பீக வாழ்வு சகஜமாய்விட்டது. வெளி வேஷம் அதிகமாயிருக்கிறது, மோட்டார் கார்கள் இல்லாமல் முடியவில்லை. ***நமது சுதேச அரசர்கள் ஒவ்வொரு ஐரோப்பிய சுற்றுப் பிரயாணத்திலும் 10, 15-லக்ஷம்போல் வாரி யிறைக்கிறூர்கள். ***500-ரூபாய் சம்பளம் வாங்குபவர் ஒரு மோட்டார்கார் வாங்கிவிடுகிறூர். நாம் கால்நடையாக நடக்க வெட்கப்படுகிறேம். வாடகை வண்டியிலேறவும் ஸங்கோஜப்படுகிறேம். ***பருத்தியைவிடப் 10-மடங்கு பட்டும், பட்டைவிட 10-மடங்கு செயற் கைப் பட்டும் வாங்குகிறேம். மனிதனுக்கு மானந்தான் தீராது; இந்தக் குப்பையெல்லாம் கூடவா வேண்டும்?"—ஆசார்ய பிரபுல்ல சந்த்ர ராய்.

---

முஸ்லிம்கள் ஆக்ஷியில்கூட வளர்ந்துவந்த ஹிந்து மக்களின் சிற்பமும் சித்திரமும் இப்போது எங்கே? யென்று மிஸ்டர் கார்மன் டக்ளஸ் கேட்கிறூர்.




# "தீண்டாதார்"க்குத் தெய்வம் இல்லையோ?

சிற்றெறும்பு முதற் பிரமன் வரை
   செப்(பு) உயிர்கள் எவற்றிலும் ஈசன் உள்
உற்றுளீர்வ(து) உணர்ந்திடில், சேரியில்
   ஒடுங்குவோரை பழிக்கத் துணிவரோ?
கற்றுணர்ந்ததன் நற்பயன் ஏழைமேல்
   கருணை காட்டுவ தல்லவோ? கோயிலில்
சிற்சிலரை விடில் தெய்வம் ஓடுமோ?
   "தீண்டாதார்"க்கந்த தெய்வமே இல்லையோ? (1)

மேற் குலத்தினர் போற்று தெய்வம் தொழ
   வேறு 'கீழ்க் குலத்தினர்' வந்திடில்,
ஏற்றிடேனென தெய்வமும் ஓட்டுமோ?
   'ஏழை பங்காளன்' என்பதும் பொய்யாமோ?
ஆற்று நீர்க்கும் ஓர் தீட்டு ஒட்டிக்கொள்ளுமோ?
   ஆண்டவன் திருஅருள் பெருகும் இடம்,
சாற்று 'தீண்டாதார்' உட்புக விட்டிடில்
   தன் பெருந் தூய்மை தன்னை இழக்குமோ? (2)

சாதி வேற்றுமை மாந்தர்க்கே யல்லது,
   தனிப் பெருங் கருணைச் செல்வனாகிய
ஆதிநாதன் தனக்கும் உண்டே கொலோ?
   அன்பர் பாணரும் நந்தனும் முன்அருட்
சோதியோடு கலந்திட வில்லையோ?
   தூய அன்னவர் தங்களை இன்னமும்
வேதியர்களும் கோயில்களில் வைத்தே
   வேளை தோறுமே பூசிக்க வில்லையோ? (3)

"ஒடுக்கப்பட்டவர் கோயிலுள் வந்திடில்,
   ஓடிப் போய்விடும் தெய்வம்"—என்றால், முனம்
தடுப்பவரின்றி பாணர் தம் கோயிலில்
   சார்ந்தபோது, திருஅரங்கேசர் தம்
படுக்கை விட்டெழுந்(து) ஓடிவிட்டார் கொலோ?

பாணர் பாடிய பாடல்களைச் செவி
மடுத்(து) அவரை அப்போ(து) அவ்வடலோடும்
மகிழ்ந்து தம்முளே கொண்டிட வில்லையோ ? (4)

ஞான பக்குவம் உற்றவர் தம்மினும்,
நைந்த சிந்தையும் அறியாமையா(ம்) இருள்
ஈன வாழ்க்கையும் உற்றவர்க்கே யன்றோ
இன்பக் கோயிலும் நன்மை பயப்பது!
ஊனப் பாழ் வயி(று) ஊட்டி வளர்த்திட
உடலும் உள்ளமும் பெரிதும் வருந்திட
மானமும் விட்(டு) உழைப்பவர், ஈசனை
மனதில் எண்ணவும் ஒய்வும் உண்டேகொலோ ? (5)

பொழுதெலாம் சலிப்பின்றி உழைத்திடும்,
பொறுமையாளனுக்(கு) இன்பமே இல்லையே!
உழு(ம்) எருதுகளோடு முறையிட்டே
உள்ளக் கவலை ஆறிட வேண்டுமோ ?
அழுது நின்றாலும் கேட்பவர் இல்லையே!
ஆறுதல் பெற ஈசனைக் கோயிலில்
தொழுது நிற்கவும் உரிமை இலை எனில்,
துயரம் ஆறுவது எவ்விதம் ? தெய்வமே! (6)

அடக்கி ஆண்டிடும் 'ஆண்டை'க்(கு) அவன்றன்மேல்
அருளதே இலை ஆயினும், ஆண்டவன்
இடத்திலே அவன் முறையிட்டு நிற்கவும்
என்றுமே முடியாத படி செய்து
தடுத்து நிற்பதும் தருமம தாகுமோ ?
சசலரையும் உய்விக்கும் கோயிலில்
'ஒடுக்கப்பட்டவர்'க்(கு) உரிமை இலை என்றே
ஓதியே சினந்(து) ஓட்டுதல் நீதியோ ? (7)

'இந்து'வாக இருந்திடும் நாள் வரை
இழிவு செய்யப்படுமோரு 'தீண்டாதான்'
'சொந்த இந்து மதம் விட்டு மற்றவர்
சொற்கிணங்கி பிற மதம் சேர்ந்திடில்,
முந்தி செய் இழிவின்றி, மதிப்போடு
மொழி அவனை நடத்தலாம்'—என்பதை
எந்த சாத்திரம் ஓதிடுகின்றது ?
இயம்ப வல்லீர்கொல் ? சாத்திரப் பித்தரே! (8)

சமரச வெள்ளம் பெருகி வருகுது;
  சண்டித் தன்மையை இன்னமும் கொண்டிடில்,
உமது வீண் பிடிவாதம் பலிக்குமோ?
  உத்தமப் பணிக்குத் தடை செய்வதேன்?
நமது நாட்டாரை நாமே ஒடுக்கிட
  நாடில், நம்மவர்க்(கு) உய்வு(ம்) உண்டாகுமோ?
உமது நெஞ்சினை வைதிகரே! இனி,
  உண்மை அன்புக்(கு) உறைவிடம் ஆக்குவீர்! (9)

ஆரியூர்—வ. பதுமநாப பிள்ளை.

---




# இராஜ சந்திரன்



(468-ம் பக்கத் தொடர்ச்சி.)

## XVI.

அவற்றைப் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறேன் என்ருன். இதைக் கேட்ட பொன்னுசாமி திடுக்கிட்டவனாய் அக்கடிதங்களை என்னிடம் கொடுத்துவிடு என்று அவனைக் கெஞ்சினன். இராமசாமி அதற்குப் பதில் கூருமலே கண்ணப்பனிடம் வந்து சேர்ந்தான். கண்ணப்பன் எல்லா விஷயங்களையும் கேட்டு மிகுந்த யோசனையிலாழ்ந்தான். இந்த சமயத்தில் பிரமாண்டமான மழை இடி மின்னலுடன் வந்து விடவே, கூடியிருந்த ஜனங்கள் நாலா பக்கங்களுக்கும் ஓடினர்கள். கூட்டமும் சிதறிக் கலைந்து விடவே, அடுத்த வாரம் சபை கூட்டித் தேர்ந்தெடுப்பதென்று அதிகாரிகள் முடிவு செய்தனர். அனைவரும் தத்தம் இருப்பிடங்கட்குச் சென்றனர்.

ஃ

கண்ணப்பன் இராமசாமி, எதிராஜன் இவர்களுடன் நேராகக் கிருஷ்ணவேணியின் வீட்டிற்குச் சென்று அவளைக் கண்டு, இராமசாமி கூறிய யாவற்றையும் தெரிவித்து, இனி, இராஜ சந்திரனை இங்கு அழைத்து வந்துவிட வேண்டியது அவசியமென்று சொன்னன். அதற்குக் கிருஷ்ணவேணி, என் தமயனின் இருப்பிடம் எவருக்கும் தெரியாதே என்ருள். கண்ணப்பன் தனக்குத் தெரியுமென்றும், இராஜ சந்திரனை யழைத்துவர இராமசாமியுடன் கிருஷ்ணவேணியும் அவள் தாயும் இப்பொழுதே செல்லவேண்டுமென்றும், மறுநாட் பொழுது புலர்வதற்குள் இராஜ சந்திரனை இருட்டில் தானே கொண்டு வந்துவிட வேண்டுமென்றும் கூறினன். இவ்விதம் கிருஷ்ணவேணியும் அவள் தாயாரும் புறப்படுவதற்குச் சௌகரியமாக அன்றையதினம் ஸ்ரீநிவாச முதலியார் ஊரில் இல்லாதது மிக்க சௌகரியமாயிருந்தது.

ஃ

இராமசாமி, கிருஷ்ணவேணி, அவளுடைய தாயார் மூவருமாக வண்டியேறிப் புறப்பட்டுச் சென்றனர். கண்ணப்பன் தெரிவித்த அடையாளப்படி 423-எண்ணுள்ள வீட்டைக்கண்டு பிடித்துக் கதவு திறந்திருந்ததால் மூவரும் வீட்டுக்குள் சென்றனர். சமையற்கட்டில் இராஜ சந்திரன் புசித்துக்கொண்டிருக்க, அவனருகில் ஒரு யுவதி புன்னகையுடன் பேசியவாறு இருந்தாள். கிருஷ்ணவேணியின் தாய் அந்த யுவதியைக் கண்டதும், "ஹா! என் கண்ணே! உன் தமயனைக் காப்பாற்றுவதற்காகவா உன்னுடைய அபரிமிதமான ஐச்வரியராசிகளையும், மக்களையும், கணவனையுங்கூட விட்டு விட்டு ஓடி வந்து விட்டாய்" என்று சொல்லி அணைத்துக்கொண்டு முத்திகளிட்டுக் கண்ணீர் பெருக்கினள். அந்த யுவதி

யும் இவர்களைக் கண்டு திடுக்கிட்டு அடங்கா மகிழ்ச்சி கொண்டாள். இராஜ சந்திரன் எச்சிற்கையுடனே "ஓ' என் அம்மா! வந்தாயா" என்று தன் தாயாரைக் கட்டிப்பிடித்துக் கொண்டான். கிருஷ்ணவேணி அங்கு இருக்கும் யுவதி கமலவல்லியே யென்று கண்டுகொண்டதும் அதி ஆச்சரியத்துடன் பிரமித்துப் போனுள். தன் தமயனுக்காகக் கமல வல்லி அவ்வளவு பிரயாசை எடுத்துக் கொண்டிருக்க, தானே அவன் காணு மற் போனதற்காக ஸந்தோஷித்துக் கண்ணப்பனைத் தான் விவாகம் செய்து கொள்ளக் கடவுளே வழி தேடினுர் என்று மகிழ்ந்திருந்த இழி குணத்திற்காக வெட்கப்பட்டுக் கொண்டாள். கண்ணப்பனைத் தான் இனி மணக்க முடியாதே என்ற நினைவுகூட அவள் மனதில் அந்த சம யம் உண்டாயிற்றென்றாலும். அந்த அல்பமான எண்ணங்களுக்குத் தன் மனத்தில் இடந்தாமல் அதிக பிர யாஸையுடன் அந்த சிந்தனைகளை ஒரு பக்கம் ஓட்டிக்கொண்டும், மற்றொரு பக்கம் கமலவல்லியுடன் அன்பாகப் பேசியவாறும் இருமனதாக இருந் தாள். ❀

கிருஷ்ணவேணியின் தாய் கமல வல்லியை நோக்கி, என் குழந்தாய், நீ கண்ணப்பனுக்குச் சொல்லிக் கொண்டு வந்திருந்தால் எவ்வளவோ நன்மையா யிருக்குமே. நீ காணுமற் போய்விட்டதற்குக் கண்ணப்பன் அழுத அழுகை கொஞ்சமா? பட்ட பாடுகள் கொஞ்சமா? வீடே அலங் கோலமாகி விட்டதே. இரகசியமாக வாவது சொல்லிக்கொண்டு வந்திருக்க லாகாதா என்று கேட்டாள். அதற் குக் கமலவல்லி கூறியதாவது:— பொன்னுசாமி புறப்பட்டுச் சென்ற பின் இரவு பத்து மணிக்கு ஒரு ஆள் என்னிடம் வந்து ஒரு கடிதத்தைக் கொடுத்தான். அதில் இராஜசந்திரன் தான் குளிர்காய்ச்சலால் சாகக்கிடப்ப தாயும், தனக்கு வேறு திக்கு இல்லை யென்றும், என் கணவரோடு என்னை வரும்படியும் எழுதியிருந்தார். என் கணவர் தன் வேலைகளை விட்டு வரு வது முடியாது. நானும் அவரும் வருவதென்றால் இராஜ சந்திரன் மறைந்திருக்கும் ரகசியமான இடம் பலருக்கும் தெரிந்து அதனால் அபாய முண்டாகும். நான் என் பர்த்தாவிடம் தெரிவித்துப் புறப்படுவதென்றால், என்னைப் பிரிந்திருக்க மனம் தரியாத அவர் இலகுவில் எனக்கு விடை கொடுக்கமாட்டார். இவைகளெல்லாம் இந்த அவசர சமயத்திற்கு உதவக் கூடியதல்ல. ஆகவே, நான் மட்டுமே எவருக்கும் கூறாமல் புறப்பட்டுப் போவதே சரி என்று கடிதம் கொண்டு வந்த மனிதனுடன் பிரயாணப்பட்டு விட்டேன். இங்கே நான் வந்தபோது அண்ணு கொடிய ஜ்வரத்தில் பிரக் ஞையே இல்லாமல் அநாதைப் பிரேத மாய் விழுந்து கிடந்தார். தகுந்த வைத்தியர்களைக் கொண்டு என்னால் ஆனவரையில் பாடுபட்டுக் கவனித் தும் கொஞ்சம் குணப்பட்டு வருவ தற்கே ஒரு மாதம் ஆயிற்று. அதற்குப் பிறகு அந்தப் பலஹீனத்துடனேயே என் அண்ணுவை என் பர்த்தாவிடம் அனுப்பி நடந்த விஷயங்கள் யாவற் றையும் கூறி வரும்படி செய்தேன். என் அண்ணுவும் என் கணவரைக் கண்டு சகலமும் தெரிவித்து, வீட்டுச் செலவுகளுக்குப் பணமும் பெற்று வந் தார். இப்போதுதான் ஒரு வாரமாக முன்போல் உடம்பு தேறி சுகமாக இருக்கிறார். நான் இவ்வளவுக்குத் துணிந்து வந்து என் அண்ணுவைக் காப்பாற்ருவிடில் அவர் செத்துப் போன இடமும் புல் முளைத்துப்போ யிருக்கும் என்று கூறிக் கதறி யழு தாள். இராஜ சந்திரனும் அழுதான்.

அவன் தாய் கமலவல்லியைத் தன் மடியில் உட்காரவைத்துக் கொண்டபடியே அழுதான். கிருஷ்ணவேணியும் தன்னை மறந்து கண்ணீர் விட்டாள். இந்த சம்பவங்கட்குப் பிறகு இராஜசந்திரன் இராமசாமியுடன் வெகு அன்பாகப் பேசி, அவர் இராங்கூனிலிருந்து நியாயாதிபதிக்கு எழுதிய கடிதத்தால் தான், போலீஸார் தன்னைக் கவனிப்பதில் சிரத்தை யில்லாமற்போய், தானும் அதுவரையில் தலை மறைந்திருப்பதற்கு முடிந்ததென்று உரைத்துத் தன் நன்றி விசுவாசத்தைத் தெரிவித்துக் கொண்டான். பிறகு எல்லோருமாக வண்டியேறிக் கண்ணப்பனின் வீட்டுக்குப் புறப்பட்டனர்.

ஃ

அதிகாலையில் நான்கு மணிக்கு இவர்கள் கண்ணப்பனிடம் போய்ச் சேர்ந்தனர். அந்த சமயம் யாவரும் நித்திரையிலிருந்தனர். கண்ணப்பன் மட்டுமே இவர்களுக்காக விழித்தபடி ஒரு புஸ்தகத்தைப் படித்தவாறு காத்திருந்தான். இவர்கள் வந்ததும் கண்ணப்பன் ஆவலுடன் வரவேற்றான். கமலவல்லி தன் பர்த்தாவின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்துத் தனது பிழையைப் பொறுக்க வேண்டுமென்று பிரார்த்தித்தாள். "நீ நல்லதே செய்தாய், ஒரு தப்பிதமும் செய்யவில்லை" என்று கூறிக் கண்ணப்பன் கமலவல்லியை அளப்பரிய ஆர்வத்துடனும் தழுவிக்கொண்டான். பிறகு யாவரும் மேன்மாடியிலுள்ள அந்தரங்கமான அறைக்குச் சென்று யோசிப்பதாயினர்.

ஃ

இராஜ சந்திரனின் தாயார் :-இனி எவ்விதமாகப் பொன்னுசாமியைக் காட்டிக்கொடுத்துவிட்டு இராஜ சந்திரனைக் காப்பாற்றுவது ?

இராமசாமி:-நாளையதினம் மாஜிஸ்திரேட்டின் முன்னிலையில், குமாரசாமி முதலியாரைக் கொலை செய்ததாக இராஜ சந்திரன்மேல் குற்றஞ் சாட்டியிருப்பது சரியல்ல வென்றும், அந்தக் கொலையைச் செய்தவன் பொன்னுசாமியே யென்று ரூபிக்கத் தகுந்த சாட்சிகள் தன்னிடம் இருப்பதாகவும் கண்ணப்பர் ஒரு மனு கொடுத்தால், அவர்கள் இந்த வழக்கைப் புனர் விசாரணைக்குக் கொண்டு வருவார்கள். பின்னர் எல்லா உண்மையும் வெளியாகிவிடும்.

கண்ணப்பன் :—சே, சே, இந்த வழக்கில் நான் சம்பந்தப்படுவது மூடத்தனம். பொன்னுசாமி எனக்குப் போட்டியாக வந்திருப்பதால், அதனால் அவன்மீது விரோதம் கொண்டு அவனுக்கு மெம்பர் ஸ்தானம் கிடைக்காமற் போகும்படியாக இந்த விதமாகப் பொய் வழக்கை, நான் உற்பத்தி செய்ததாக நியாயாதிபதிகள் ஒரு சமயம் அபிப்பிராயப்பட்டு விடலாம். இதனால் நமது வழக்கே கெட்டுவிடும். அதுவுமன்றி இராஜ சந்திரன் என் மைத்துனனாகையால் அவனைக் காப்பாற்றுவதற்காக அவன் செய்த கொலையை எனக்குப் போட்டி மனிதனாக வந்துள்ள பொன்னுசாமியின்மீது சுமத்த நினைப்பதாகப் பிறர் சொல்லவும் யோசிக்கவும் இடமேற்பட்டு விடும். ஆனதால், நான் இதில் பகிரங்கமாக முன்னிற்கவே கூடாது.

இராஜசந்திரன் :—நீ சொல்வது சரிதான். பிறகு, வேறெந்தவிதமான ஏற்பாட்டைச் செய்ய எண்ணியிருக்கிறாய் ?

கண்ணப்பன் :—வேறு பிரசித்தி பெற்ற வக்கீலைத் தேடிப்பிடித்து அவரிடம் இந்த வழக்கைக் கொடுத்து, மாஜிஸ்திரேட்டின் முன்னிலையில் தாவா செய்து மறு விசாரணைக்குக் கொண்டுவரலாம். அதற்குத் தகுந்த வக்கீல் பௌரிங்பேட்டையிலிருக்கும் லாயர் குருநாத முதலியார் தான்

சரி. அவர் வெல்வாயன். அவரிடம் இந்த வழக்கைக்கொடுத்து, அவருக்கு வேண்டிய உதவிகளை நான் பின்னுக்கு இருந்து செய்தால், அவர் இந்த வழக்கை ஜெயித்து விடுவார்.

என்று கூறினன். அதற்கு எல்லோரும் சம்மதித்தனர். இவர்களின் பேச்சு வார்த்தைகளும் யோசனைகளும் முடிவதற்குள் பொழுது விடிக்தது. இராஜசந்திரனை மேன்மாடியிலேயே மறைத்துவிட்டு அனைவரும் கீழ் இறங்கிவந்தனர். கமலவல்லியை ஜானகியே முதலில் கண்டு ஆச்சரியத்துடன் சந்தோஷித்தவளாய் அணைத்துக்கொண்டாள். காணமற்போன கமலவல்லி வந்துவிட்ட சங்கதி வெகு சீக்கிரமாக வெளியிற் பரவிற்று. கமலவல்லி தன் குழந்தைகளை வாரி எடுத்து முத்தமிட்டுக்கொண்டு மகிழ்ந்தாள். எல்லோரும் வீட்டுக்கு வந்து கமலவல்லியை விசாரித்தனர். இதுவரையில் கமலவல்லி எங்கு இருந்தாள் என்பதுமட்டும் எவருக்கும் தெரியவில்லை.

ஃ

கண்ணப்பன் இராஜசந்திரன், இராமசாமி இவர்களுடன் பெளரிங் பேட்டைக்குச் சென்று லாயர் குருநாத முதலியாரைக் கண்டு, அவரைத் தனியான அறையில் வைத்துக்கொண்டு சகல சங்கதிகளையும் விவரித்தான். இராஜசந்திரன், இராமசாமி இவர்களும் தங்கட்குத் தெரிந்த யாவற்றையும் கூறினர்கள். லாயர் குருநாத முதலியார் இந்த வழக்கைத் தாம் வாதிப்பதாயும், இன்றைய தினமே மாஜிஸ்திரேட்டிடம் மனு கொடுத்துப் பொன்னுசாமியின் மீது கொலைக்குற்றம் இருப்பதாக வழக்குக் கொண்டுவரப்போவதாய்த் தெரிவிப்பதாகவும் சொன்னர். இராமசாமி தன்னிடமுள்ள தங்கவேலு என்று கையொப்பமிட்ட பிராமிசரி நோட்டும், தானும் பொன்னுசாமியும் எடுத்துக்கொண்ட போட்டோ படமும், அபிராமிக்குப் பொன்னுசாமி முன்பு தங்கவேலு என்ற பெயருடன் எழுதிய காதற் கடிதங்களையும் லாயரிடம் கொடுத்தான்.

ஃ

அடுத்த வாரம் சுகாதார இலாக்காவுக்கு அங்கத்தினரைத் தெரிந்தெடுக்க சபை கூடிற்று. அந்தக் கூட்டமானது யாருடைய கக்ஷிக்கு அதிக பலமிருக்கிறதென்பதைச் சோதிக்கும் அரங்கமாகிவிட்டது. ஜனங்கள் இரண்டுபேர்களில் தாங்கள் விரும்பியவர்களுக்கு வோட் கொடுத்தனர். லாயர் கண்ணப்பனுக்கு 96-வோட்டுகளும், பொன்னுசாமிக்கு 20-வோட்டுகளும் கிடைத்தன. அதிகாரிகள் இதை யறிந்து லாயர் கண்ணப்பனுக்கே கௌரவ மெம்பர் ஸ்தானத்தைக் கொடுத்தனர். இதைக் கேட்டதும் ஜனங்கள் 'கண்ணப்பர் வாழ்க' என்று கரகோஷம் செய்தார்கள். அப்போதேனும் பொன்னுசாமிக்கு நல்ல புத்தியாவது நல்லுணர்ச்சியாவது எற்பட்டதாகத் தெரியவில்லை. அவன் தலை குனிந்து வெட்கியிருந்தபோது எதிராஜன் அவனைக் கண்டு நீ ஜெயித்துவிட்டாயா என்றான். அதற்குப் பொன்னுசாமி முகத்தைச் சுளுக்கிக்கொண்டு, இந்த முட்டாள் ஜனங்களுக்குப் புத்தி எது என்று கண்டபடி வைதான். அந்த சமயத்தில் போலீஸ் அதிகாரிகள் அங்கு வந்து பொன்னுசாமியிடம் ஒரு வாரண்டைக் காண்பித்து, அவன் அதை வாசித்துப் பார்க்குமுன், "கருணைமிகுந்த கவர்ன்மெண்டாரின் உத்திரவுப்படி உன்னை நாங்கள் கைது செய்கிறோம்" என்றார்கள். (தொடரும்) S. G. R

# மாபாவி சிற்றன்னை.

(486-ம் பக்கத் தொடர்ச்சி.)



சிற்றன்னை :—(முகத்தைச் சுளித்துக்கொண்டு) உனக்கு எங்கள் வீட்டுச்செய்தியே தெரியாதுபோலிருக்கிறது. அதுதான் நீ இப்படிப் பேசுகிறாய். அந்தப் பயலுக்கு எப்போதும் மந்தாரத்தைத் தொந்தரைச்செய்வதுதான் வேலை. ஒரு நாளாவது அவன் புஸ்தகத்தைத் திறந்துப் பார்த்ததை நான் கண்டதில்லை. இந்த மூதேவியும் அவனை விட்டுப் பிரியமாட்டேனென்கிறாள்.

உமா:—நீ கூறுவது சுத்தப் பொய். அவனுக்கு இவன்பேரில் அளவுகடந்த பிரியமுண்டென்பதை நான் அறிவேன்.

ஃ

நாட்கள் சில சென்றன. சுதாகரனுக்கு சனித்தசை நீங்கவில்லை. அவன் வீட்டிலிருந்து பாடசாலைக்கு அரைமைல் தூரமிருந்தது. வழியில் கங்கை நதியின் ஒரு பாகத்தைக் கடந்தே செல்லவேண்டும். அக்காலத்தில் நதியைக் கடப்பதற்குப் படகைத் தவிர பாலமொன்றுமில்லை. படகை ஓட்டிச்செல்ல மனிதரும் கிடையா. ஜனங்கள் தங்களுக்குத் தேவையானபோதெல்லாம் படகில் ஏரி அக்கரைக்குச் செல்வது வழக்கம். சுதாகரன் சிறுவனானதால் ஒரு வேலையாள் அவனுக்குத் துணையாகப் போய்க்கொண்டிருந்தான். மாலை வேளைகளில் மட்டும் அவனுக்கு வேலையாளின் உதவி வேண்டியதில்லை. பள்ளித்தோழர்கள் ஏராளமாயிருந்தபடியால் அவன் அவர்களோடு படகில் ஏறி இக்கரை வந்து சேர்வான்.

ஃ

ஒருநாள் சுதாகரன் வழக்கம்போல் பாடசாலைக்குப் புறப்பட்டான். அன்றையதினம் அவன் சிற்றன்னையின் கோபத்துக்கு ஆளாகியிருந்தான். அவன் வேலையாளோடு வாசற்படி இறங்கியதும் சிற்றன்னை வீட்டினுள்ளிருந்தபடியே "அடே!" என்று இடி இடித்தாற் போலக் கூவி "நீ போக வேண்டாம். கடையிலிருந்து சாமான்களை வாங்கிவர ஆளில்லை. அவன் இன்று தனியே போகட்டும்" என்றாள்.

வேலையாள் :—சின்ன யஜமான் துணையின்றி செல்வது ஆபத்து. இன்று நதியில் நீர் கரை புரண்டோடுகிறது. நான் போய்விட்டு உடனே திரும்பி வந்துவிடுகிறேன்.

சிற்றன்னை :—பரவாயில்லை. வழியில் ஜனங்கள் ஏராளமாக இருப்பார்கள். இவன் என்ன, பால்மணம் மாறாத பச்சைக் குழந்தையா பயப்படுவதற்கு? படகை ஓட்டத் தெரியாவிட்டால் தண்ணீரில் மூழ்கித் தொலைந்துபோகட்டும். இவன் பின்னால் நடப்பதற்கு இங்கே ஆளில்லை. உனக்கு வேறே வேலையுண்டு.

ஃ

---

வேலை போய்விட்டவர்கள் வேளைக்குத் தகுந்தபடி தாளம் போடுவார்கள். வேலையிலிருந்தபோது அனைவர்க்கும் வேண்டியவர்களாக ஏன் நடந்துகொள்ளக்கூடாதோ? ஓர வஞ்சனையில்லாத ஒரே நன்னெறியில் ஏன் இருக்கலாகாதோ?

இவ்வார்த்தைகள் சுதாகரன் மனதைப் புண்படுத்தின. வேலையாள் குழப்பமடைந்தான். அவனுக்கு வீட்டரசியின் கட்டளையை மீறி நடப்பதற்குத் துணிவு ஏற்படவில்லை. சிற்றன்னை சுதாகரனை நோக்கிக் கர்ஜித்தான் :—

"சனியே! இவ்விடத்தைவிட்டு ஒழியாமல் நிற்கிறாயா? நான் வந்து உன் மதத்தை அடக்க வேண்டுமா?"

ஃ

சுதாகரன் வேலையாளின் நிலைமையை நன்குணர்ந்துகொண்டவனாய் "நீ வரவேண்டாம், நான் தனியே போகிறேன்" என்று கூறியவாறு அவ்விடத்தை விட்டு நீங்கினான். மிக்க நுட்ப மனதுடையவர்களுக்குப் பிறர் கூறும் சுடுமொழிகள் எவ்வண்ணம் இதயத்தைப் புண்படுத்துமென்பதைப் பட்டவரே அறிவார்.

ஃ

மந்தாரத்துக்கு அங்கு நடந்த விஷயங்களொன்றும் புரியவில்லை. அவன் மிகுந்த ஆவலோடு வினவினான் :—"அம்மா! அண்ணா—?"

உடனே "சீ! கழுதை! வாயை மூடு" என்ற பதில் சிற்றன்னையிடமிருந்து வந்தது. நற்குணமுடைய வேலையாளின் மனம் சஞ்சலமடைந்தது. அந்த நாள் குடும்பத்தில் ஆறாத் துயரத்தை நிலைநிறுத்தும் தீய நாளென அவன் சிந்தையில் தோன்றியது. வீட்டுவேலைகளொன்றிலும் அவன் மனம் கலக்கவில்லை. அவன் உள்ளம் சுதாகரனைப்பற்றியே நினைவாயிருந்தது.

ஃ

மாலை நேரம் வந்தது. மந்தாரம் வழக்கம்போல் சுதாகரனை எதிர்பார்த்தவாறு வாசற்படியில் நின்றுகொண்டிருந்தான். பணியாட்கள் வேலைசெய்துகொண்டிருந்தார்களாயினும் அவர்கள் பார்வை அடிக்கடி வாசற்பக்கமாகச் சென்றது. சுதாகரன் வரவில்லை. குறிப்பிட்ட வேளை கடந்ததால் அவர்கள் திகிலடைந்தனர். சிற்றன்னையின் மனதிலும் ஒருவித கலக்கமுண்டாயிற்று. மந்தாரமும் வாசலில் நின்றவண்ணம் "அண்ணா! அண்ணா!" வென்று உரக்கக் கூவியழைத்தான். மறுமொழியொன்றும் கிடைக்காததால் அவன் பெருங் குரலில் அழலானான்.

ஃ

ஆபீஸினின்றும் மாலையில் திரும்பிவந்த சுந்தரலால் இச்செய்தியைக் கேட்டதும் மூர்ச்சையடைந்து வேரற்ற மரம்போல் சாய்ந்தார். அருகிலிருந்தோர் அவருக்குத் தக்க உபசாரம் செய்து மயக்கம் தெளியவைத்தனர். எனினும், அவர் மனதில் ஆறுதல் சிறிதும் ஏற்படவில்லை. பணிமக்களும் உற்றார் உறவினரும் சுதாகரனைத்தேடி நாற்றிசைக்கும் சென்றனர். சுந்தரலால் மனதை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு நேரே பாடசாலைக்குச் சென்று தலைமை உபாத்தியாயரிடம் செய்தியைக் கூற, அவர் ஆஜர்க் குறிப்புப் புஸ்தகத்தை எடுத்துப் பார்த்துவிட்டு "சுதாகரன் இன்று பாடசாலைக்கு

---

தமது இறகு வன்மையையும மதிவன்மையையும் காட்டி மயக்க வருவதிற் சிலர் மிகு நிபுணர்கள். இன்னோர் தமது குற்றச் செயலை மறைக்கத் தம் புத்தி நுட்பமெல்லாம் கொட்டிப் பல பக்கக் கடிதம் வரையினும், அவை பயனில் சொற்களே யாகிவிடும். முதலில் இன்னோராற் புண்பட்டு விழிப்பெய்தினோரை மீண்டும் அயர்ந்து தூங்கச்செய்வதென்று முடியாததாகும்.

வரவில்லை" என்றார். இதனைக் கேட்டதும் சுந்தரலாலுக்கு அடிவயிற்றில் இடிவிழுந்ததுபோலிருந்தது.

தலைமை உபாத்தியாயர் வருத்தத்தோடு கூறினார்:—"பாவம்! அவன் நல்ல பையன். நேற்று மேலதிகாரி இங்கு வந்திருந்தார். அவருக்கு சுதாகரன்பேரில் அளவற்ற பிரியமுண்டாயிற்று. அவர் அவனைப்பற்றி வெகு அக்கரையாய் என்னிடம் விசாரித்தார். இன்று காலையில்தான் அவர் இவ்வூரை விட்டுச் சென்றார்."

இவ்வார்த்தைகள் துயரக்கடலில் மூழ்கிய சுந்தரலால் காதில் விழவில்லை. அவர், "ஆ! ஈசா!.................." என்று பெருமூச்சுவிட்டு மேலே கூறமாட்டாமல் தயங்கி நின்றார். அவர் உள்ளம் பற்றி யெரிந்தது; கண்களினின்றும் நீர் தாரை தாரையாய் வடிந்தோடியது.

அதன்பின் சுதாகரனைக் கண்டுபிடிப்பதற்காக சுந்தரலால் எடுத்துக்கொண்ட முயற்சிகளனைத்தும் விழலுக்கிறைத்த நீர்போலாயின. சுதாகரனைக் கங்கை நதிக்கரையில் பார்த்ததாகப் பகர்ந்தனர் பலர். ஆனால், அதற்குமேல் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அறிந்தோர் எவருமில்லை. அவன் நீரில் மூழ்கி மடிந்தானென்று ஏற்பட்டது. ஃ

மாபாவி சிற்றன்னை மகிழ்வெய்தினளாயினும், அவள் உள்ளத்தில் இன்னதென்று வருத்துரைக்க வொண்ணாததோர் திகில்—கலக்கம் இடையிடையே எழுந்துகொண்டிருந்தது. மந்தாரமோ இணையைப் பிரிந்த புறாவைப்போலும், கன்றை இழந்த பசுவைப்போலும் "அண்ணா! அண்ணா" வென்று அல்லும் பகலும் அழுது புலம்பிச் சகோதரனைக் குறித்துத் தன் பெற்றோரிடம் வினவியவாறிருந்தாள். ஆனால், அவளுக்கு அவர்களிடமிருந்து எவ்வித பதிலும் கிடைக்கவில்லை. அவள் நாளடைவில் தன் தாயின் அன்பற்ற விஷ உள்ளத்தை நன்கு கண்டுகொண்டனள்.

ஃ

நாட்களும் மாதங்களும், வருடங்களும் முறையே சென்றவண்ணமிருந்தன. மந்தாரம் பேதைப் பருவஞ்சென்று பெதும்பைப் பருவங் கடந்து மங்கைப் பருவமடைந்து யாவரும் மயங்கும் தெய்வத் திருவுருவுடன் விளங்கினள். நங்கையர்குரிய நால்வகைக் குணங்களும் அவளிடம் பொற்பணிகளாய்த் திகழ்ந்தன. பருவகாலத்து எண்ணங்களும் உணர்ச்சிகளும் அவள் மனத்திடை எழுந்தன. எனினும், அந்தப் பழய நாள் நினைவு,—சிறுபருவ விளையாட்டில் துணை நின்று உதவிய அரிய சோதரனின் ஞாபகம்,—அவள் மனதைவிட்டகலவேயில்லை. அண்ணனின் உருவம் அவளது அகமாகிய தாமரையில் குடிகொண்டு உறைந்திருந்தது. சுதாகரன் மறைந்த நாள்முதல் அவளுக்கு உலகத்துப் பொருள்கள் மீதிருந்த உண்மையான அன்பும் அபிமானமும் இல்லாதொழிந்தன. அவளுக்கு இவ்வுலகமே வெற்று வீடாய், பாழ்மனையாய்த் தோன்றியது. அவளது விளையாட்டுக் கருவிகள் யாவும் கவனிப்பாரின்றி அனாதைபோல் ஆங்காங்கு கிடந்தன. ஃ

---

ரயில் யாத்திரைகளில் பலவித சங்கடங்களை நம் நேத்திரங்களில் அடிக்கடி காண்கிறோம். நம்மவரே உத்தியோகஸ்தராய் நமக்கு உபத்திரவம் செய்வோராயுமுள்ளார். நமது ஜனங்கள், நம் நாட்டவர் என்ற தன்மதிப்பை யுணர்ந்தாது நடந்துகொள்ளும் அறிவீனத்திற்கு இரங்கவேண்டியதே.

ஒரு நாள் மந்தாரம் வீட்டுத் தாழ்வாரத்தில் வீற்றிருக்கையில் ஓர் அழகிய வாலிபன் அவன் முன்பு தோன்றினன். அவனைக் கண்டதும் மந்தாரம் மகிழ்ச்சியால் முகமலர்ந்து புன்னகை புரிந்தான். அவ்வாலிபன் முகத்தில் மந்தஹாஸமும், உள்ளத்தில் உற்சாகமும் விளங்க வினவினன்:— "உன் கையில் இருப்பதென்ன"?

மந்தாரத்தின் முக கமலம் திடீரென வாடியது. அவன் கண்களில் நீர் ததும்பக் கூறினன்:—

"இது என்னருமைச் சகோதாரியின் படம். புண்பட்ட என் மனதிற்கு இதுவே சற்று ஆறுதலளிப்பதாயிருக்கிறது."

வாலிபன்:—சுதாகரன் அதிர்ஷ்டசாலி; மிகவும் நல்லவன். இப்பிரபஞ்ச வாழ்க்கையின் பாரத்தை—துன்பங்களை—அனுபவிக்கவொட்டாமல் கடவுள் அவனை அழைத்துக்கொண்டார். பெற்ற தாயில்லாத கொடுமையின் முடிவு இது.

மந்தாரம்:—அந்தோ! என்னுருயிர்ச் சோதரனை, அன்பின் குவியலை, அமிர்தகுணமணியை எங்ஙனம் மறப்பேன்? அது இப்பிறப்பில் ஆகும் காரியமா?

மந்தாரத்தின் உள்ளத்தில் துயரம் கரைபுரண்டெழுந்தது. அவன் அதை அடக்க இயலாதவனாய் தேம்பித் தேம்பி அழுதான். வாலிபன் அவனுக்கு இதமுரைத்து ஆற்றித் தேற்றி வேறுபல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்து, பிறகு அவனிடம் விடைபெற்றுச் சென்றனன்.

ஃ

வாலிபன் பெயர் ராமேசன். அவன் அண்டைவீட்டு உமாவின் மகன். அழகிலும் கல்வியிலும் ஒப்பாரும் மிக்காருமின்றித் தானே சிறந்து விளங்குபவன். இளமையில் சுதாகரனோடு ஓடி விளையாடி உயிருக்குயிராய் உற்ற துணையாய் நின்றவன். இத்தகையோன் சிறுவயதில் மந்தாரத்தின்பேரில் கொண்டிருந்த அன்பு நாளடைவில் காதலாக மாறிற்று. அதற்கேற்ப மந்தாரத்தின் பெற்றோரும் அவனை ராமேசனுக்கே கொடுத்து மணஞ் செய்விக்கவேண்டுமென்று தீர்மானித்திருந்தனர். மந்தாரமும் இதைச் சந்தோஷத்துடன் ஏற்று நின்றனன். இந்த மகிழ்ச்சிப் பெருக்கினிடையிலும் அவன் மனதிலோர் பெருங்குறையிருந்தது. அது மற்றொன்றுமல்ல; புது வாழ்க்கையில் புகப்போகும் தனக்கு அருகில் நின்று ஆசிகூற அருமைச் சோதரன் இல்லையே என்ற ஏக்கமே. இந்தச் சிந்தனையால் அவன் துயரம் நிமிஷத்துக்கு நிமிஷம் பெருகிக்கொண்டிருந்தது. ஆகவே அவன் கண்ணீருவியில் மூழ்கிக் கிடந்தனன்.

ஃ

ஒரு நாள் ஞாயிற்றுக்கிழமை சுந்தரலால் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தார். அப்போது தபால்காரன் அங்கு வந்து அவரிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். அவர் முதலில் தபால் முத்திரையைப் பார்க்க, அதில் லண்டன் என்றிருந்தது. பின் விலாசம் யாருடைய கையெழுத்தென்று பார்த்து அது விளங்காமையால் கடிதத்தைப் பிரித்துப் பின்வருமாறு வாசிக்கலானார்:—

லண்டன்,

7-8-1932.

அன்புமிக்க அப்பா!

நான் தங்களுக்குச் செய்த அபராதம் பொறுத்துக்கொள்ளக் கூடியதல்ல. அதற்குக் காரணம் நானன்று,

என்னை இப்போது ஆதரித்து வருபவராவார். நான் உயர்நிலை அடைகிற வரையில் உண்மையை வெளியிடலாகாதென அவர் எனக்குக் கட்டளையிட்டிருக்தார். என் சிற்றன்னையின் சகித்தற்கரிய கொடுமைகளிலிருந்து தப்புவதற்கு அவருடைய கிருபை எனக்கு வேண்டியிருந்ததால் அவரது வார்த்தைக் கிணங்கி நான் இதுகாறும் வாளாவிருந்தேன். ஆகவே, தாங்கள் என்னை மன்னிக்க வேண்டியது. இப்போது என்னை சொந்தப் புத்திரனைப்போல் பாராட்டிப் பாதுகாத்து வருபவர் தங்களுக்கு ஏற்கனவே அறிமுகமானவரும், நான் பயின்ற பாடசாலையின் மேலதிகாரியுமான ஆங்கில கனவானேயன்றி வேறில்லை. நான் வீட்டை விட்டு வெளியேறியதற்கு என் சிற்றன்னை என்னைப் படுத்திய பாடுகளே காரணம். அவரைக் கடவுள் மன்னிப்பாராக.

என் தங்கை மந்தாரம் இப்போது பெரியவளாயிருக்கக்கூடும்; அவள் என்னை ஒருபோதும் மறந்திராள்.

ஃ

கடிதத்தின் இப்பாகத்தைப் படித்தபோது அருகிருந்து கேட்டுக்கொண்டிருந்த மந்தாரம் "ஆ!" வென்று தன்னையே முற்றிலும் மறந்து அலறினள். அவள் விழிகளில் ஆனந்தக் கண்ணீர் ஆறுய்ப் பெருகியது. தந்தையின் நிலைமையை நாம் கூறவும் வேண்டுமா?

ஃ

சுந்தரலால் கடிதத்தைத் தொடர்ந்து வாசித்தார்:—

"தங்கையின் உருவம் என் மனதை விட்டகலவில்லை. அவளைப் பற்றிய நினைவு அல்லும் பகலும் என்னை வாட்டி வதைத்தது. ஆங்கில துரைக்குத் தெரியாமல் இவ்விடத்தை விட்டு வெளியேறப் பன்முறை முயன்றேன். அப்போதெல்லாம் நான் அவருக்கு அளித்த வாக்குறுதி என் நினைவுக்கு வர, என் மனத்தை ஒருவாறு அடக்கிக்கொண்டு இதுகாறும் பொறுத்து நின்றேன். என் நேசன் ராமேசன் நற்குணக்குன்று; பளிங்கனைய மனத்தினன். அவனுக்கு மந்தாரத்தைக் கொடுக்கலாம். அடுத்த மாதம் ஊர் வந்து சேருகிறேன்.

என்னருமைச் சிற்றன்னை சௌக்கியமா? அவர்களது ஆசீர்வாதத்தினுலேயே,—அவர் என்னைப்படுத்திய கொடுமைகளினுலேயே,—பிரிந்து இங்கு வந்து கல்வி கற்றுத் தேறி, நான் இங்குள்ள உயர்தர நீதிமன்றத்தில் இப்போது நியாயவாதித்தொழில் நடாத்தி வருகிறேன். இந்த விஷயங்களையெல்லாம் எனது இன்னுயிர் நேசனுகிய ராமேசனுக்கு அறிவிக்கவும், இங்ஙனம்

தங்கள் அன்புள்ள
சுதாகரலால்.

ஃ

கடிதத்தின்படி மறுமாதம் சுதாகரலால் பெரிய மனித உருவுடன் ஊர் வந்து சேர்ந்தான். தந்தையும் தனயனும் சந்தித்து ஆநந்தக் கண்ணீர் சொறிந்தனர். மந்தாரம் தன் அண்ணனைக் கண்டு மகிழ்ந்தாள். ராமேசனும் இந்தக் கொண்டாட்டத்தில் பங்கு பெற்றுக்கொண்டான். மாபாவி சிற்றன்னையும் தன் ஆணவம் அடங்கிப் பல்லை யிளித்தபடி நின்றுள். இப்பொழுது முன்போல் சுதாகரலாலைக் கொடுமைப்படுத்த முடியுமோ? இனி அவள் நாய்போல் அடங்கி உட்படவேண்டியதே.

த. சு. சங்கரலிங்கம்.

# கத்திச் சங்கக்கொடி.



"நேற்றிரவு அயர்ந்த நித்திரையில் என் வாயில் துணியைய யடைத்து, என் கையையும் காலையும் கட்டிவிட்டு, என் தலையணையின் கீழ் இருந்த சாவியை எடுத்துக்கொண்டு இரும்புப் பெட்டியிருக்கும் அறைக்குச் சென்று யாவற்றையும் கொள்ளையிட்டுச் சென்றனர். அப்போது 11-மணி இருக்கும்."

—'வந்தவர்கள் எப்படி இருந்தார்கள்?"

—"என் நிதிலில் எதையும் கவனிக்கவில்லை. விளக்கு மங்கலாக எரிந்து கொண்டிருந்ததால் ஒன்றும் தெரியவில்லை. வந்தவர்கள் முக மூடி யணிந்திருந்தனர். காலையில் என் மாமா வீட்டுக்குள் வரவும் என் அலங்கோலத்தைக்கண்டு திக்கிட்டுக் கயிறுகளை அவிழ்த்து என்னை விடுவித்தார்."

அத்தருணத்தில் அங்கு ஒருவர் வரவும், அவரைக் காண்பித்து இவர் தான் என் மாமா; இவர் தான் என் கட்டுகளை அவிழ்த்தார் என்று அவ் வீட்டு எஜமானியான லலிதா கூறினள். துப்பறியும் கேசன் யாவற்றையும் கேட்டுக்கொண்டான்.

கேசன்:—இவர் உங்கள் தாய் மாமனு? எதற்காக அவ்வளவு காலையில் வந்தார்?

லலிதா:—ஆம், தாய் மாமன்தான். இவர் பெயர் துரைசாமி. பத்துருபாய் கடன் கேட்க வந்திருந்தார். யாவும் கொள்ளைபோய் விட்டபடியால் தபாலாபீஸ் சேவிங் பாங்கியிலிருந்து இருபது வாங்கி அவருக்குப் பத்து ரூபாய் கொடுத்தேன்.

இதன்பின் கேசன் களவுபோன இடத்தை யெல்லாம் சோதித்து விட்டு லலிதாவிடம் விடை பெற்றுத் திரும்பி சென்னை போலீஸ் கமிஷனருக்கு—"கத்திச் சங்கத்தைச் சேர்ந்த சுந்தர் என்பவன் ஜெயிலிலிருந்து தப்பியது எப்போதென்றும், அவன் அங்க அடையாளங்கள் என்னென்னவென்றும்" தெரிவிக்கும் படித் தந்தி யனுப்பினன்.

ஃ

அன்றிரவு களூர் ரயில்பாலத்தடியில் கருப்பு மூடிகளுடன் சிலர் காணப்பட்டு, தெற்குத் திக்கை நோக்கி நடந்து வீட்டிற்குள் நுழைந்தனர். இனி வடுகத்தெருவு மடத்து வீட்டை மாற்றி வேறிடம் பார்க்க வேண்டு மென்றனர். அவர்களைத் தொடர்ந்து சென்ற ஒருவன் இதைக் கேட்டுவிட்டு சிறிது நேரத்தில் அவ்விருந்து திரும்பி வடுகத் தெருவுக்கு வந்து ஒரு மாடி வீட்டின் பின் பக்கமாய் ஏறி உள்ளுக்குக்குதித்து யாவற்றையும் சோதித்து விட்டு ஒரு பெரிய மூட்டை கட்டிக்கொண்டு வெளியேறித் தெருவை யடைந்தான். அவன் எதிர்பார்த்த அவனது வேலையாள் அங்கு காத்திருக்கவே அவனிடம் மூட்டையைக் கொடுத்தனுப்பி விட்டு, மறுபடியும் சோதிப்பதற்கு மேல் ஏறிக்குதித்து உள் நுழைந்தான். அடுத்த நிமிஷத்தில் அவ்வீட்டின் கதவைத் திறந்துகொண்டு சிலர் மின்சார விளக்குடன் உட்சென்றனர்.

II

கரூரின் அருகிலுள்ள தாந்தோணி மலையின் அடிவாரத்தில் ஒரு வீட்டில் இரண்டு தினங்களாகத் துப்பறியும் கேசன் அடைபட்டிருந்தான். அவன் பசியால் வருந்திச் சாகும்படியான நிலையிலிருந்தான். அவன் இரண்டாமுறை அவ்வீட்டுக்குட் சென்றதும், அதே நிமிஷம் வீட்டுக்குள் நுழைந்தவர்கள் அவனைக்கண்டுபிடித்துத் தங்களின் கத்திச் சங்கக்கொடியை அவனுக்குக் காண்பித்து அவன் கண்களைக் கட்டி இங்குகொண்டு வந்து சிறையிட்டுச் சென்றனர். கேசன் தன்னால் இயன்ற மட்டும் கதவை யுடைக்க முயன்றும் முடியவில்லை. அங்கே கிரோஷின் எண்ணெய் விளக்கு ஒன்று இருந்தது. அதிலிருந்த எண்ணெயைக் கதவுக்கருகில் அங்கிருந்த செத்தைகளை யெல்லாம் சேர்த்து வைத்து ஊற்றி, தான் சுருட்டு குடிப்பவனாதலின் தன்னிடமிருந்த தீக்குச்சியால்பற்றவைத்தான். சிறு நெருப்புப் பெரிய நெருப்பாகிக் கதவும் பற்றிக்கொண்டது. இவனிருந்த இடம் மாடிக்கட்டிடம். அதற்கு அடுத்த அறை கூரைவீடாக இருந்தது. இந்தத் தீ பெருகிக்கூரை வீட்டிலும் தாவிற்று. கேசன் இந்த சமயம் எரிந்த கதவை இடித்துத்தள்ளி வழி செய்துகொண்டு வெளியில் வந்து விட்டான். அதே சமயம் கூரை வீட்டிலிருந்து தீ! தீ! என்று ஒரு பெண்ணின் குரல் கேட்கவே, கேசன் நெருப்புக்கிடையில் கூரையின்மீது ஏறி உள்ளுக்குள் குதித்து அங்கே கட்டுண்டுகிடக்கும் பெண்ணைத் தூக்கிக்கொண்டு மறுபடி மேலே ஏறினான். இதற்குள் தீ முற்றிலும் பாவவே அதற்குள் சிக்கிக் கொண்டானாயினும் லக்ஷியம் செய்யாது பெண்ணை வெளியில் இறக்கித் தானும் குதித்தான். எங்கும் இருள். இருளில் தீப்பற்றி எரிகிற வெளிச்சம். அதில் ஒருவரை யொருவர் கண்டுகொள்ள முடியவில்லை. இருவரும் துரிதமாய் அவ்விடத்தை விட்டு வெகுதூரம் நடந்து சென்றனர். வழியில் கேசன் அப்பெண்மணியின் பெயர் விவரங்களை விசாரித்தான். தன் பெயர் குமுதினி என்றும், தான் கரூர் மனோரஞ்சிதம் ஐயரின் புத்திரி யென்றும், தன்னைத் திரிச்சியிலிருக்கும் தன் அத்தையின் குமாரர் துப்பறியும் கேசவருக்குப் பேசி விவாகத்திற்கு ஏற்பாடாகியிருந்ததென்றும், அவ்வூர் பாங்கருடைய குமாரன் ஆநந்தன் தான் ஆற்றிற்கு ஜலமெடுத்து வரச்சென்ற சமயம் திடீரென்று தன்னை மோட்டாரில் தூக்கிப்போட்டு வாயில் துணியை யடைத்துக்கொண்டு வந்து கூரை வீட்டில் சிறை வைத்ததாயும், கையையும் காலையும் கட்டிவிட்டுப் பூட்டிட்டுக்கொண்டு சென்றதாயும், தெரிவித்தான். கேசன் இவற்றைக் கேட்டுப் பிரமித்தான். குமுதினியும் தன்னைக் காப்பாற்றியவன் தான் மணக்க இருக்கும் அத்தையின் குமாரனே யென்று அறிந்து வியப்புற்றாள்.

கேசன்:—எத்தனை தினங்களாக உன்னை இங்கே அடைத்து வைத்திருக்கிறார்கள்?

---

வெளி ஆரவார உபசாரத்தைக் கண்டு உள்ளதை ஆராயாது மயங்கிடாதீர்கள். பழத்தைத் தின்னப்போய், எலியானது பாழான பொறியில் விழுவதுபோல், நீங்கள் பிறாது வெளிநடிப்பாகிய சக்கரைக்கு ஆசைப்பட்டு சதா துன்பம் தேடிக்கொள்ளாதீர்கள். எந்தப் புற்றில் எந்தப் பாம்போ! சக்கரைப் பொங்கலில் மயங்கி கோயில் அர்ச்சகருக்கு ஜாமீன் கையெழுத்திட்டுப் பின் தவித்தோருமுண்டு.

குமுதினி:-என்னை இங்குகொண்டு வந்து மூன்று தினங்களாயின. வேளை தவறாமல் ஒருவன் போஜனம் கொண்டு வருகிறான். நேற்று ஆநந்தனும், அவனுக்கு வேண்டிய துரைசாமி என்பவனும் இங்கு வந்து நான் விவாகத்திற்கு சம்மதிக்காவிடில் கொலை செய்வதாயும், ஒரு புரோகிதனை வைத்து இங்கேயே விவாகம் நடத்தி விடுவதாயும் கூறினர். நான் பதில் பேசவில்லை. நாளை காலையில் வருவதாகச் சென்றனர்.

கேசன் குமுதினியோடு கரூர் சேர்ந்து, அவள் தாய் வீட்டில் அவளைச் சேர்ப்பித்து, அவளை ரகசியமாய் மறைத்து வைக்கும்படி ஏற்பாடு செய்தான்.

III

லலிதா தன் வீட்டுக்களவைப் பற்றிக் கேசனிடம் விசாரித்து வருமாறு துரைசாமியை அனுப்பினாள். துரைசாமியும் கேசனைக் கண்டு ஏதாவது துப்பு துலங்கிற்றோ என்று விசாரித்தான். அதற்குக் கேசன் இனிமேல் தான் அதைப்பற்றிக் கவனிக்கப் போவதாகத் தெரிவித்தான். துரைசாமியும் விடைபெற்றுச் சென்றான். கேசன் அவனைத்தொடர்ந்து செல்லுமாறு தன் மனிதனை யனுப்பினான். துரைசாமி வெளியில் வந்ததும் ஒரு கடிதம் எழுதி ஒரு வண்டிக்காரனிடம் கொடுத்தனுப்பினான். கேசனின் ஆள் அந்த வண்டிக்காரனைத் தொடர்ந்து சென்று அவனுக்கு ஒரு ரூபாய் கொடுத்துக் கடிதத்தைப் பெற்று அதிலிருந்ததை எழுதிக் கொண்டு, அதைத் திருப்பி அவனிடமே தந்துவிட்டு, கேசனிடம் வந்து நடந்த விஷயங்களைக் கூறித் தான் எழுதி வந்த கடிதத்தையும் கொடுத்தான். அக்கடிதத்தில் பின் வருமாறிருந்தது :—

—“திருமலைக்கு எழுதியது. கேசனைக்கண்டு பேசியதில் அவனுக்கு நம்மிடம் சந்தேகமில்லை. குமுதினி எரிந்து போயிருப்பாள். பாலத்தடியில் இரவு சந்திக்கவும்,”—‘கந்தி.’

என்றிருந்தது. கேசன் சென்னை போலீஸ் கமிஷனருக்கு அனுப்பிய தந்திக்குப் பதில் கிடைத்தது. சகல விவரங்களும் புகைப் படமும்கூட இருந்தது. கேசன் லலிதாவின் வீட்டிற்குச்சென்று அவள் தாய் மாமனைப் பற்றி விசாரித்ததில், தனக்கு ஒரு மாமன் உண்டென்றும், அவர் எங்கோ பம்பாயில் இருப்பதாக வெகு காலமாய்க் கேள்வி என்றும், தன் சிறு வயதில் பார்த்ததே தவிரப் பிறகு காணவில்லை—அவர் வரவும் இல்லையென்றும், இப்பொழுதுதான் துரைசாமியைத் தன் தாய் மாமன் என்றறிந்து சந்தோஷித்ததாயும் கூறினாள். அதற்குக் கேசன் உன் தாய் மாமனின் பழைய விலாஸம் உன்னிடம் இருக்கிறதா என்றதற்கு லலிதா ஒரு பழைய தபால் கார்டைக்கொண்டு வந்து கொடுத்தாள். அது ஒரு வருஷத்திற்குமுன் லலிதாவுக்கு அவள் தாய் மாமன் எழுதியதாக இருந்தது. லலிதாவின் கணவனுடைய மரணத்துக்கு வருந்தி எழுதியிருந்தார். கேசன் அக்கார்டைப் பெற்றுத் திரும்பினான். உடனே பம்பாய் போலீஸுக்கு ஒரு தந்தி யனுப்பினான். அன்று மாலை அதற்குப் பதில் கிடைத்தது. அன்றிரவு முன் ஏற்பாட்டின்படி பாலத்தடியில் போலீஸாருடன் காத்திருந்து அங்கு கூடின கத்திச் சங்கத்தாரைப் பின்பற்றிச்சென்று அனைவரையும் கைது செய்தான். அதில் துரைசாமியும் ஆநந்தனும் இருந்தனர்.

IV

கரூர் கோர்ட்டில் விசாரணை ஆரம்பமாயிற்று. கேசன் பின்வருமாறு கூறினான். லலிதாவின் வீட்டு களவை நான் சோதிக்கச்சென்றபோது அங்கு துரைசாமியைக் கண்டதும் திடுக்கிட்டேன். இவன் முன்பு பம்பாயில் சுந்தர் என்ற பெயருடன் கத்திச் சங்கத்தின் தலைவனாய்ப் பல கொள்ளைகள் நடத்தித் தண்டனையடைந்து ஜெயிலிலிருந்து தப்பி ஓடியவன். இவனை அப்பொழுது நானே பிடித்துத் தண்டனைக்குள்ளாக்கியவன். ஆனதால், போலீஸ் கமிஷனருக்குத் தந்தி தந்து விவரங்களைக் கேட்டதில் புகைப்படத்துடன் யாவும் கிடைக்க, இந்தத் துரைசாமியே சுந்தர் என்பவன் என்று தெரிந்து கொண்டேன். இவன் பம்பாயிலிருந்தபோது அங்குள்ள ஒருவருக்குச் சொந்தமாய்க் கரூரில் லலிதா என்று ஒரு பெண் இருக்கிறதென்று தெரிந்துகொண்டு, தானே அந்த பம்பாய் ஆசாமி என்றும், தாய் மாமனென்றும் கரூரில் லலிதாவிடம் சொல்லிக்கொண்டு அவளிடம் தங்கி, பண இருப்பு விவரங்களெல்லாம் தெரிந்துகொண்டு, பிறகு இரவில் தன் கூட்டத்தாருடன் வந்து லலிதாவின் வீட்டைக் கொள்ளையடித்து விட்டு, மறுநாட் காலையில் ஏதோ பத்துரூபா கடன் கேட்க வந்ததுபோல் வந்து லலிதாவின் கட்டுகளை அவிழ்த்து விடுவிக்கிறான். பிறகு தன் கூட்டாளியான ஆநந்தனுக்குக் குமுதினியைக் கொண்டுவரத் துணையாகி அவளை ஒரு வீட்டில் சிறைவைக்கிறான். பாலத்தடியில் உள்ள ஒரு இருண்ட தோப்பில் ஒரு ரகசிய வீட்டில் போய் நோட்டுகளை அச்சிட்டு வருகின்றனர். கரூரில் பிரபல பாங்கராக இருக்கும் ஆநந்தன் அதை வெளியில் பரப்பிவருகிறான். வடுகத் தெருவில் உள்ள வீட்டிற்குள்ளிருந்து அநேக ஆயிரம் ரூபாய் நோட்டுகளையும், லலிதாவிடம் காணாமற்போன வைவகளையும், கண்டெடுத்துப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அனுப்பினேன். பின் என்னைச் சிறையிட, குமுதினியோடு தப்பி வந்து, பிறகு லலிதாவிடம் அவள் தாய் மாமனின் கார்டைப்பெற்று அதிலுள்ள விலாஸத்தில் விசாரிக்கும்படி பம்பாய் போலீசுக்குத் தந்திதர, அவர்கள் துரைசாமி ஐயர் என்று நாணயமான பட்டு வியாபாரி நெடுநாளாக அங்கு இருப்பது உண்மையென்று தந்திமூலம் தெரிவித்தனர். அதிலிருந்து இங்குள்ள துரைசாமி என்பவன் வேற்று மனிதனென்பது நிச்சயமாயிற்று. உண்மையான துரைசாமி தான் புறப்பட்டு வருவதாய் எனக்குத் தந்தி அனுப்பியிருக்கிறார். பாலத்தடியில் நேற்றிரவு கத்திச் சங்கத்தார் கூடப்போவதை துரைசாமிஎழுதியகடிதத்தால்அறிந்து முன்னேற் பாட்டுடன் போலீஸாரோடு காத்திருந்து கைது செய்தேன் என்றார். பிறகு விசாரணையும் நடை பெற்றது. லலிதாவின் தாய் மாமனான துரைசாமி பம்பாயிலிருந்தும் வந்து தன் பெயருடன் நடித்தவனை யறிந்து வியப்புற்றார். சுந்தர் என்ற துரைசாமிக்கும், ஆநந்தனுக்கும், அவனைச் சேர்ந்த எட்டுபேர்களுக்கும் சிக்ஷை கிடைத்தது. கேசனின் கீர்த்தி பரவியது. அடுத்த மாதத்தில் கேசனுக்கும் குமுதினிக்கும் விவாகம் என்று அறிகிறோம். லலிதாவுக்கு அவள் இழந்த சொத்துக்கள் கிடைத்து சுகமாய் இருக்கிறாள்.

K. V. S. வாஸ்.

[30—பக்கங்களுள்ள இக்கதையை இங்கு சுருக்கித் திருத்தி முடித்திருக்கிறது ப—ர்.]






## 3. இல்லறம்.

(470-ம் பக்கத் தொடர்ச்சி.)

306. "பிறந்த இடத்து வன்மையை உடன்பிறந்தானிடத்தில் சொல்லுகிறதா?"

தின்னை முற்றிலும் அறிந்திருக்கும் தன் ஸகோதரியிடத்துத் தன் பிறப்புப் பெருமையைச் சொல்லிக் குதிப்பது எத்தனை அவிவேகமோ, அத்தனை அவிவேகமே கணவனிடத்து மனைவி தன் தாய் வீட்டுப் பிரதாபத்தைச் சொல்லி அவனையும் அவனது குடித்தனத்தையும் பழித்துப் பேசுவதும். இவ்விதமே, தன் மனைவி ஏழ்மைக்குடியிலிருந்து வந்தவளாயிருந்தால் அவள் முன்பாகத் தன் கௌரவ மேன்மைகளைப் பேசி, அவளை ஒரு பிச்சைக்காரி யென்றும், ஒற்றைப் பாவாடையோடும் வெறுங்கழுத்தோடும் வந்த தரித்திரக்கட்டை யென்றும் கேவலப்படுத்துவதும் ஈனமாகும். அதிலும், பிறர் முன்னையில் ஸதிபதிகள் ஒருவரை யொருவர் தாழ்த்தி இழிவு படுத்துதல் இன்னும் அதிக அறிவீனமாகும். தம்பதிகளில் ஒருவர் பெருமைப் படுவதில் மறறவர்க்கும் அந்தப் பெருமை சேருவதுபோல, ஒருவர் இகழப்படுவது மற்றவர்க்கும் இகழ்ச்சியேயாகும். கணவனும் கணவியும் பரஸ்பரம் மனமொத்து ஒருவரை யொருவர் மதிப்பில் உயர்த்திக் கௌரவப்படுத்துதலே இல்வாழ்வுக்குச் சிறப்பாகும்.

307. "புகை நுழையாத இடத்திலே புகுந்திடும் தரித்திரம்."

அக்கினி இல்லாத வீட்டிலே அமைதி எப்படி யிருக்கும்? நெருப்பு இருந்தே புகை தோன்றவேண்டும். நெருப்பில்லா வீட்டில் சமையலில்லை. சமைக்காத காரணம் வீட்டுக்கலகத்தால் ஏற்படலாம். அந்தக் கலகமும் குடும்ப க்ஷேமத்துக்கு ஒரு தரித்திரப் பீடைதான். கையிற் செலவுக்கின்றி சமையலில்லா திருக்கக்கூடும். அதுவும் தரித்திரக்குறியே. ஆதலின், எப்பொழுதும் அடுப்பில் கொஞ்சம் நெருப்பு இருந்து கொண்டிருக்கவேண்டு மென்றும், அக்கினி அவியக் கூடாதென்றும் பெரியோர் கூறுவர்.

308. "பூலோக முதலியார் பட்டம் புகுந்து பார்த்தால் பொட்டல்."

வீட்டுத் தலைவனுடைய கீர்த்திகளும், பெயரின் வியாபகங்களும் வெளியிலே வெகு பெருமைப்படுவதா யிருக்கலாம். அந்தப் பெருமைக்குத் தக்கபடி செலவுகளும் அதிகரித்துப்போய் வீட்டுக்குடித்தன வாழ்க்கை அன்றுட செலவுகளுக்கே வழியில்லாமல் கஷ்டப் படுவதாயிருக்கலாம். தம்மிடம்

வேலை செய்கிறவர்களிடத்திலேகூடக் கடன் கேட்டுப் பெறுவதான கோலமாகவும் இருக்கலாம். புகழையும், பெருமையையும் கொடுத்து உலகெங்கும் போற்றும்படி செய்த கடவுள், பிறகு வாழ்விலே தரித்திரப்படும்படியான குறைவைப் புகுத்திச் சோதனை செய்வதாயுமிருக்கலாம். வரவு மீறி வெளிக் கௌரவங்கட்குச் செலவிட்டு அதனாலும் ஏழ்மைப்பட்டுப் போயுமிருக்கலாம். இத்தகையோரின் வீட்டுக்குடித்தனத் தாழ்வை மனத்தினால் எண்ணாமலும், அதன் பொருட்டு அவர்களைக் கேவலப்படுத்தாமலும், அவர்கள் பெற்றான "பூலோக முதலியார் பட்ட"த்தைக் கௌரவித்து மேன்மைப் படுத்துதலே அறிவுடைமையாகும். சில பெரிய வீடுகளின் உள் நிலைமையை இப்பழமொழி விளக்குவதாகவும் கொள்ளலாம். வெளி ஆரவாரத்தைக் கொண்டே மயங்கி நம்பிக்கை வைத்து விடலாகா தென்பதும் மற்றோர் கருத்து. ஒவ்வொரு குடித்தனமும் ஒவ்வொரு தினுசாக நடை பெறுவதிலே, இந்தப் பெருமைக் குடித்தன வாழ்வும் ஒரு தினுசு.

309. "புதியாரை நம்பிப் பழையாரைக் கைவிடலாமா?"

புதிதாக வந்த மனைவியின் வகையினரை மட்டுமே நெருங்கிய உறவினர்களாய் நினைத்துக்கொண்டு, அவர்களோடேயே ஒட்டிக்கொண்டு, அவர்களுக்கே செலவிட்டுக்கொண்டு, அதற்குமுன் இருந்த பழய பந்துக்களையும், தன்னை ஆதரித்தவர்களையும் ஒதுக்கிவிடுதல் ஆங்காங்கு காணும் சம்பவம், இது புது வாழ்விலே துள்ளிப்போன சங்கதி. இவ்விதமே, நெடுநாள் விசுவாசமாய் உழைத்த வேலையாளை நீக்கிப் புதியவர்களை வேலைக்கு அமர்த்துதலும் நியாயமாகாது. தனக்குச் செல்வங் கூடிவிட்ட நிலையில் அந்தப் பதவிக்குத் தகுந்த சிநேகிதர்களுடன் குலாவிக்கொண்டு பழய நண்பர்களை மறந்துவிடும் குணமும் சிலருக்குண்டு. இவ்விதமே, இளையாளை நேசித்து மூத்த மனைவியைக் கொடுமைப்படுத்துதலும் சாதாரணம். இவை யாவும் இல்வாழ்வுக்கு ஒரு சாபமாகவே வந்து விடியும். இதில் ஏற்படுகிற சந்தோஷமும் நீடிப்பதில்லை.

310. "புதுப் பானைக்கு ஈ சேராது."

பழயபானை எத்தனையோ ஈக்களுக்குத்தன்னை மொய்க்கச் செய்து அதனதன் வயிற்றுக்கு உணவும் தந்து ஆதரித்துக்கொண்டிருந்தது. புதுப் பானையோ எவரையுமே சேர்க்காது. அதன் பசையற்ற குணத்தைக்கண்ட எந்த ஈயும் அதனிடம் சேராது. ஒரு குடித்தனத்தில் முன்னிருந்து வாழ்ந்த பழய பெண் அனைவரையும் சேர்த்து வைத்து ஆதரித்து எல்லோருக்கும் வேண்டியவளாய், யாவராலும் விரும்பப்பட்டவளா யிருந்திருக்கலாம். அவள் காலகதியாற் கண் மூடிப்போக, புதிதாய் வந்த இளையவளோ எந்தப் பழயவர்களையும் சேர்க்காத குணத்தன்மையை மேற்கொண்டு நிற்கலாம். அவளது மனப்போக்கை யறிந்தமற்றவர்களும் அங்கு நெருங்காமல் தூர விலகிப்போய் விட்டவர்களாகவும் ஆகலாம். புதியது–பழயதாக மாறவும், பழமையோடு கலக்கவும் பல நாள் செல்லவேண்டும்.

---

கவியினுடைய வாக்கு அமிர்தத்திற்குச் சமானமானது. அமிர்தம் சாகாது. கவியின் வார்த்தையின் பொருளை இருதயத்தில் வாங்கிவிடில் அதுவும் சாகாது.




# 1942-ம் வருஷத்திய ஹரிஜன மஹாநாடு!



என் விநோத விகட உலகத்தின் குடிபடைகளே! நஞ்சான் குஞ்சான்களே! வைதீக வித்துக்களே! எடுத்ததற்கெல்லாம் மதம் போய்விட்டது—மதம்போய் விட்டது என்று கூக்குரலிடுபவர்களே! கால சக்கரம் எவ்வளவு வேகமாய்ச் சுழன்று கொண்டு ஓடுகின்றதென்பதைக் கண்டீர்களா? இருபது நாள் கட்டைவண்டிப் பிரயாணத்திலுள்ள ஊரை இரண்டே மணி நேரத்தில் தாண்டிக்கொண்டு வந்துவிடும் ஆகாயப் பிரயாணத்தின் அதி ஆச்சரிய கனவேகத்தை இப்பொழுது நீங்கள் நேரிலேயே பார்க்கிறீர்களல்லவா? அப்படிப்போலவே, ஒரு கார்த்திகை மாதத்து முப்பது நாட்களுக்குள்ளாகவே 1933—முதல் 1941—வருஷங்கள் வரையும் வந்து போய் விட்டு, அதே கார்த்திகை மாதம் 28—ம் தேதியில் 1942—ம் வருஷமும் பிறந்துவிட்டதென்றால் இதில் ஆச்சரியமென்னவிருக்கிறது! பெண்ணாய்ப் பிறந்து ஒருவனை மணந்து வாழ்ந்த பின்பு, திடீரென்று தேகத்தில் ஆண் சின்னங்கள் தோன்றி ஆண் உருவும் முகத்தில் மீசையும் புறப்பட்டு, முற்றிலும் புருஷ ரூபமாகவே மாறி, வேறொரு பெண்ணைத் தனக்கு மனைவியாகக் கொண்டு அசல் ஆண் மகனேயாகி விட்ட எத்தனையோ சம்பவங்களையும் நீங்கள் பத்திரிகையில் வாசித்திருக்கிறீர்களல்லவா? இவ்வாறெல்லாமிருக்கையில், திடீரென்று மடமடவென உருண்டு, ஓடிக்கடந்து 1942-ம் வருஷம் பிறந்து விட்டதும் ஒரு அதிசயமாகுமோ! எல்லாம் காலத்தின் வேகம்தான்! இனி, இந்த 1942—ம் வருஷத்திய ஹரிஜன மஹா நாட்டின் நடவடிக்கை விவரங்களை விகடன் வாரியளந்து கொட்டத் தொடங்கிக்கொள்கிறேன்! கேட்கிறீர்களா கேளுங்கள்!

ஃ

ஆழ்வார்களால் மங்களாசாசனம் கண்டு பாடல் பெற்றதாய் இந்த இந்தியாவிலுள்ள 106—வைஷ்ணவ க்ஷேத்திரங்களுக்கும், மேல் உலகிலேயிருக்கிற திருப்பாற்கடல், பரமபதம் ஆகிய இந்த இருக்ஷேத்திரங்கட்கும், ஆக இந்த 108—க்ஷேத்திரங்களுக்கும் முதன்மை பெற்றதாய்,முதல்

லகத்தைக்கொண்டு முதலாவது வைஷ்ணவ க்ஷேத்திரமாய் விளங்கும் ஸ்ரீரங்கத்திலே, ஆயிரக்கால் மண்டபத்திலே, அங்கு போடப்பட்டிருந்த பிரம்மாண்டமான அழகிய பந்தலில் 1942-ம் வருஷத்திய ஹரி ஜன மஹாநாடு பகல் 11½-மணிக்கு மிக்க வைபவமாகக் கூடிற்று. சரியாக பத்து மணிக்கு மஹாநாட்டின் அக்கிராஸனாதிபதியான இஜட், டபிள்யூ, ஸர் காட்டேறிமுத்துவீராயத் தீண்டாத் திருமேனியார் எம். ஏ; ஐ. ஸி. எஸ்; ஏ. எல். ஓ. டி. பி. எல். டி. அவர்களை யானை மீது வீற்றிருக்கச் செய்து இருபுறமும் சாமரைகள் வீச, ஸ்ரீரங்கம் கோவிலிலிருந்தும் பெருமான் மரியாதையாக அனுப்பப்பட்ட பூரண கும்பத்துடனும், சித்திரை வீதி தை வீதிகளில் ஊர்வலமாய் வந்து 11-மணிக்கு ஆயிரக்கால் மண்டபத்திலுள்ள அழகிய கொட்டகைக்குள் பிரவேசமாகி, பலத்த கரகோஷ ஆரவாரங்களுக்கிடையே ஸபா மண்டபத்தில் அமர்ந்தார். மஹா நாட்டின் வரவேற்புக்கமிட்டித் தலைவரான விசிஷ்டாத்வைத சண்ட மாருதம்—பிரதிவாதி ஓட்டம்—பிரஸங்க கேஸரி மண்ணச்சநல்லூர் பெரிய சக்ரவர்த்தி ஸ்ரீமான் எதிராஜ வீர ராகவ ஆச்சாரியார் ஸ்வாமிகள் தமது வரவேற்புப் பிரஸங்கத்தை வாசித்தார்.

ஃ

ஸபா நாயகரோடு விளங்கும் பாரத ஸந்தானங்களே! கண்ணியர்களே! மகாத்மா காந்தியடிகளின் ஒப்பற்ற தியாக விசேஷத்தாலும், இணையற்ற பிரசாரத்தாலும் தீண்டாமைப் பேய் நமது புண்ணிய பூமியான இப்பாரததேசத்தை விட்டகன்று அநேக வருஷங்கள் கடந்து விட்டன. தீண்டாதார் என்று எழுகோடி ஜனங்களை உயர் வகுப்பார் விலக்கியிருந்த மஹா பாதகமான சண்டாளச்செயல் நம்மை விட்டுப் பறந்துபோய் விட்டது. என்ன காரணத்தாலோ பூர்வத்தில் நமது தேசத்தின் மாபெரும் மக்களான அவர்களை விலக்கிவைத்து, அங்ஙனம் விலக்கியதனால், அவர்களும் மிக்க கேவலமான நீச வாழ்வு நடத்த வேண்டியவர்களாய் மாறி, ஊருக்கு வெளியில் ஒரு புறத்தே வசிக்கும்படியான பரிதாபத்தையடைந்து போயினர். அந்த அநீதம் மஹாத்மா காந்தியடிகளின் முயற்சியால் நீங்கி, ஹரிஜனங்கள் இன்று நம்முடன் ஒன்று சேர்ந்து, நம்மைப் போலவே அவர்களும் ஆசார சீலர்களாய், வித்தியாவந்தர்களாய், பெரும் உத்தியோக பதவிகளை ஏற்றவர்களாய் உயர்குடிமக்களாகப் பரிமளிக்கிறார்கள்.

ஃ

ஹரிஜனங்களின் ஆலயப் பிரவேசக்கிளர்ச்சி மகாத்மாவால் 1932-ம்ஆண்டில் தொடங்கப் பெற்றது. அப்பொழுது வைதீக சிரோன்மணிகளும் ஆஸ்திக பக்தர்களும் ஹரிஜனங்களைத் திருக்கோயில்களுக்குள் விடவே கூடாதென்றும், அதனால் புனிதமாயுள்ள விக்கிரக மூர்த்திகட்குக் களங்கம் ஏற்படுமென்றும், பூர்வத்தில் பெரியோர்களால் பிரதி ஆலயங்களிலும் மூலஸ்தானங்களில் வேதோக்த பூர்வமாய் யந்திரஸ்தாபனங்கள் செய்யப்பெற்று மஹா மந்திரங்களுக்கிடையில் மூலவர்களும் உற்சவர்களுமான விக்கிரகஸ்தாபனங்

"கால சக்கரம் சுற்றி வருகிறது. மணியடிக்கும் சமயம் இது. எல்லாம் பகவான் செயல். நன்மைக்குப் பாடு பட்டால் அது நன்மையாகவே முடியும்."—ஸ்ரீ. ஸி. ராஜகோபாலாச்சாரியார்.

களும் அமைக்கப்பட்டிருப்பதின் மஹா பரிசுத்தமான நிலை கெட்டு விடுமென்றும், சிறிது அபரிசுத்தம் ஏற்படினும க்ஷணமே ஸம்ப்ரோக்ஷணை செய்து புனிதப்படுத்தி வருவதனாலேயே, பக்த கோடிகள் திருக்கோயில்களின் முதல் வாயிலை மிதித்த அளவிலேயே ஆத்ம பரிசுத்தம் பெறக் கூடியவர்களாயிருந்து வருகிறார்களென்றும், இத்தகைய மஹா புனிதமானது கேவலம் நீச வாழ்விலுள்ள ஹரி ஜனங்களின் ஆலயப் பிரவேசத்தால் மகிமை குன்றி திருக்கோயில்களின் பரிசுத்தமே பாழ்பட்டு விடுமென்றும மிகுந்த உக்கிரகமாய் எதிர்த்தார்கள். இந்த எதிர்ப்பும் நியாயமாகவே இருந்தது. ஏனெனில், சிகரெட்டுகளும் சுருட்டுகளும் குடித்துக்கொண்டு கோயில்களுக்குள் நுழைந்தால் என்ன செய்கிறது? அவ்விதமே சில இடங்களில் நடந்துமிருக்கிறார்கள். வெகுகால துராசாரப் பழக்கம் திடீரென்று திருந்தி விடாது. அவ்வளவு இழிவும் நீசத்தனமுமான நிலையில் ஹரி ஜனங்கள் அந்த 1932, 1933-ம் வருஷங்களில் மிகவும் அருவருக்கத்தக்க சண்டாளத்துவமான வாழ்வை நடத்தி வந்தார்கள். இறந்த பிராணிகளைப் புசித்து, அசுத்தமான இடங்களில் வசித்து, அசுசியான சரீரத்துடன் ஆபாஸமாய் இருந்தார்கள். அத்தகையோரை ஆலயங்களுக்குள் விடுவதெனில், அது சகிக்கொணாத அக்கிரமமாகவும் இருந்தது. அவர்களின் பொருட்டுப் பல ஆலயங்கள் பல இடங்களில் திறந்து விடப்பட்டனவென்றாலும், திருவரங்கம் போன்ற பிரதான ஆலயங்களுக்குள் விடுவதற்கு வைதிகப் பெரியார்கள் ஒப்பவில்லை. ஃ

இதன் மத்தியில் மஹாத்மா காந்தியடிகள் மற்றொரு உண்ணாவிரதத்தை ஆரம்பித்து விடவே, எங்கும் கிளர்ச்சி முற்றி விட்டது. ஹரி ஜனங்கள் ஹிந்துக்களாயிருக்கும் போது ஏன் அவர்கள் வெளியிலிருக்க வேண்டும்?—என்ற கேள்வி பலத்து விட்டது. மஹாத்மாவின் பிராணன் இன்றோ நாளையோ பிரிந்து விடுமென்று பயங்கரப்படவும் நேர்ந்து விட்டது. இவ்வுலகத்திற்கே மஹா புனிதராய் விளங்கும் தவ முனிவரை இழக்கக்கொடுக்க மனம் ஒப்பவில்லை; ஹரி ஜன ஆலயப்பிரவேசமும் நியாயமாய்த் தோன்றவில்லை; என்ன செய்வதென்று தத்தளித்த நிலையில் தெய்வீகமாய் ஒரு சுலபமான ராஜி மார்க்கம் தோன்றிற்று. ஹிந்து மதத்திலிருந்து கிறிஸ்தவம் போன்ற அன்னிய மதங்களில் புகுந்தவர்களை வேதோக்தமான சடங்குகள் நடத்தி மறுபடியும் ஹிந்து மதத்தில் சேர்த்துக்கொள்ள சாஸ்திரங்களில் தக்க ஆதாரங்கள் இருந்து, அவ்விதமே அநேகர் சேர்த்துக் கொள்ளப்பட்டும் இருக்கிறார்கள். வெகு காலத்திற்கு முன்பு மலையாளத்தில் மாப்பிள்ளைக் கலகம் ஏற்பட்டுப் பலாத்காரமாக இஸ்லாம் மதத்தில் சேர்ப்பிக்கப்பட்டுப் போனவர்களை மூன்று நாள்வரை ராமஜெபம் செய்யுமாறு செய்து வேதோக்த சடங்குகளை நடத்தி மீண்டும் ஹிந்து மதத்திற் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். அதே விதமாக, ஹரி ஜனங்களையும் வேதோக்தமான சடங்குகள் நடத்தி வைஷ்ணவ ரீதிப்படி சமாஷ்ரயணை செய்வித்து சங்குசக்ர முத்திரைகள் தரிப்பித்துப் புனிதப்படுத்தியும், இதே விதமாக சைவ ஆலயங்களில் சைவ

---

“ஒவ்வொரு சீர்திருத்த இயக்கத்திலும் சிறிது எதிர்ப்பு இருக்கவே இருக்கும்.”—மகாத்மா.

தீக்ஷைகள் மூலமாகப் புனிதப்படுத்தியும், இவ்வாறுகப் புனிதப்படுத்தப்பட்டோர்களை மட்டுமே திருக்கோயில்களுக்குள் விடுவதென்று ஒரு முடிவு செய்யப்பெற்று, அதை வைதீக சிரோன்மணிகளும், ஆஸ்திக பக்தர்களும் மனஸ்பூர்வமாக ஏற்றுக்கொண்டனர். அதன் பின்பு திருக்கோயில்களில் பலத்த காவல்கள் ஏற்படுத்தப்பெற்று வேதோக்த சடங்குகளால் புனிதம் செய்யப்பெற்ற ஹரி ஜனங்களை மட்டுமே ஜாக்கிரதையாய்க் கவனித்துத் திருக்கோயில்களுக்குள் விடத்தொடங்கினர். அதுமுதற்கொண்டு ஹரி ஜனங்களும் பகவத்தரிசன மஹாத்மியத்தால் மேலான எண்ணங்கள் கொண்டவர்களாகி நித்யஸ்நானம், பஜனை, ஆசாரமான நிர்மல வாழ்க்கை, பரிசுத்த ஸ்தலங்களில் வாசம் முதலியவைகளை ஏற்றுப் புனிதமடைய ஆரம்பித்து விட்டனர். அவர்களின் இழிந்த பறை மேளமும் ஒழிந்தது. பின் நாளடைவில் ஹரிஜனங்கள் யாவருமே வேதோக்த மந்திரங்களால் புனிதம் செய்யப்பெற்றோராகி, ஆலயப் பிரவேசமும் சாதாரணமாகி, திருக்கோயில்களின் மஹா புனிதத் தீற்தும் பங்கமில்லாமல் ஒரு கிரமமான நிலைமை ஏற்பட்டுவிட்டது. தீண்டாமை என்பது நமது பாரத பூமியை விட்டகன்று ஓடத்தொடங்கி இப்பொழுது தீண்டாமை யென்ற நாமமே இல்லாதொழிந்து போயிற்று. இது பூர்வீக வரலாறு ஆகும். இப்போது இந்த 1942-ம் வருஷத்திலோ ஹரி ஜனங்களும், மற்ற உயர்ந்த ஜாதி ஹிந்துக்களும் பரஸ்பரம் அன்னியோன்யமாய் ஸகோதர பாசத்துடனும் ஐக்கிய பலத்தோடும் வாழ்ந்து வருகிறோம். இந்த ஹரிஜன மஹா நாடு இதற்கு முன்பு எட்டு வருடங்களில் பிரதான புண்ய க்ஷேத்ர பூமிகளில் நடந்து, இப்பொழுது ஒன்பதாவது மஹா நாடு மஹா புனிதமான ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் திருக்கோயிலுக்குள்ளாக இந்த ஆயிரக்கால் மண்டபத்தில் கூடியிருப்பதில் இங்கு விஜயம் செய்துள்ள யாவரையும் அன்புடனும், பாரத சந்தானங்கள் என்ற முறையிலும் வரவேற்கின்றோம். மஹா நாடு இனிது முடிவதாக—என்று ஆச்சாரிய ஸ்வாமிகள் தமது வரவேற்புப் பிரசங்கத்தை முடித்தார்.

ஃ

அதன்பின் பலத்த கரகோஷங்களின் இடையிலே அக்கிராஸனதிபதி எழுந்து, விஸ்தாரமான பிரசங்கம் செய்தார். அதன் சாரத்தை மட்டும் விகடன் இங்கு தருகிறேன். ஹரி ஜனங்களை ஆதிகாலத்தில் முதன் முதலாகத் திருகோயிலுக்குள் வருஷத்தில் மூன்று நாள் புகுந்து தரிசிக்கும்படியான ஏற்பாட்டைத் திருநாராயணபுரத்தில் செய்தவர் ஆதிசேஷ அவதாரமாகிய ஸ்ரீ ராமாநுஜாரவர். அதற்கு பின்பு மஹாத்தமா காந்தியடிகளின் மகத்தான பிரசாரத்தால் திருக்கோயில்களின் மஹா புனிதத் தன்மைக்குப் பங்கமில்லாதபடியும் வேதோக்த சடங்குகளால் புனிதம் செய்யப்பெற்ற ஹரி ஜனங்களை மட்டுமே ஆலயத்துக்குள் விடத்தக்கதாயும்—ஒரு புதிய அனுஷ்டானத்தை வழக்கத்திற்குக்கொண்டு வந்தார். அப்போது சொற்பமாய் ஆரம்பமான இந்த அனுஷ்டானம் நாளடைவில் விரிவு பெற்று, இப்பொழுது ஹரி ஜனங்கள் யாவருமே பரம புனி

---

"ஒரு பிரச்சினையைத் தீர்த்துவிடுவோமானுல் மற்றப் பிரச்சினையின் முடிவு நெருங்கிவிடும்," —மகாத்மா.

தர்கனாய், பிராமணரல்லாத மற்ற ஹிந்துக்களைப் போலவே எற்றுக்கொள்ளப்பட்டு, தீண்டாமை என்பதே அடியுடன் எரிந்து சாம்பலாகி மறைந்து விட்டது. இந்த மஹா நாடு நன்கு நிறைவேறுமாறு மஹாத்மா பம்பாயிலிருந்து வாழ்த்துத் தந்தியனுப்பி ஆசிர்வதித்திருக்கின்றார். ஆதியில் வருஷத்தில் மூன்று நாட்களுக்கு மட்டுமே திருக்கோயிலுக்குள் போகும்படியான ஏற்பாட்டைச் செய்த ஸ்ரீ ராமாநுஜர் பெரியவரா? —தீண்டாமையையே அற்றுப்போகச் செய்து என்றைக்கும் பிராமணரல்லாதாரைப் போன்று ஹரி ஜனங்களும் ஆலயத்துக்குச் செல்லுமாறு புரிந்த மஹாத்மா காந்தியடிகள் பெரியவரா? என்று ஒரு சிறு தர்க்கம் செய்யப்படுகிறது. இந்தத் தர்க்கம் சரியானதல்லவென்று நான் கண்டிக்கிறேன். ஸ்ரீ ராமாநுஜர் அவதார புருஷர். வைதீக நிலையிலிருந்து மேற்கண்ட ஏற்பாட்டைச் செய்தருளினர். மஹாத்மா காந்தியடிகள் லௌகீக மார்க்கத்திலேயே இருந்து, லௌகீகமாக வாழ்ந்து, லௌகிக முறையிலும், இராஜீய ஞானத்தோடும், பாரத தேசத்திற்கு ஐக்கிய பலமும் ஸ்வராஜ்ய சித்தியும் உண்டாகத் தக்க விதமாய்—இக்கருத்துகளோடும் தீண்டாமையைப் போக்கி, ஆலயப் பிரவேச உரிமையை ஹரி ஜனங்கள் பெறும்படி செய்தார். ஸ்ரீ இராமாநுஜர் பரம சாம்பிராஜ்யமான பரம பத முக்தி கிடைக்கும் வழியில் ஹரி ஜனங்கட்கு ஆலயப்பிரவேச உரிமை வழங்கினர். காந்தி யடிகளோ இவ்வுலகில் ஸ்வாராஜ்ய சித்திக்கான பக்குவ வழியில் லௌகீக ராஜீயத்தில் உயர்த்தும் பொருட்டு ஹரிஜனங்களை ஆலயப் பிரவேச உரிமை யுடையோராகச்செய்து பரிசுத்தப்படுத்தினர். எனவே, இருவரும் அனுஷ்டித்த வழி முறைகள் வெவ்வேறாகும். எனினும், லௌகிகத்திலும் வைதிகமே மகத்தான பரம நிலை கொண்டதாதலின் ஸ்ரீ இராமாநுஜரே பெரியோராவார். அதற்குப் பின்பு லௌகிக ராஜீய ஞானியான மஹாத்மா காந்தியடிகளைச் சொல்லலாம்—என்று விஸ்தாரமாகப் பேசி முடித்தார். அதன் பின்னர் ஹரி ஜனங்களின் முன்னேற்றத்தைப்பற்றிப் பல தீர்மானங்கள் செய்யப்பெற்று நிறைவேறின. மஹா நாடு மூன்று தினங்கள் வரை மிகவும் சிறப்பாக நடந்தது. முடிவில் திருப்பல்லாண்டு, திருப்பாவை, திருவருட்பா, திருவாசகம் முதலிய பாசுரங்கள் பாடப்பெற்று, யாவரும் ஸ்ரீரங்கநாதரையும் திருவானைக்காவல் அகிலாண்டேச்வரியையும் பக்தி பூர்வமாய்ச் சேவித்து, தீர்த்தப் பிரசாதங்கள் ஆனபிறகு மஹா நாடு மிக்க வைபவமாய்ப் பூர்த்தி பெற்றது. விகடனும் இந்த மஹா நாட்டின் விசேஷங்களைக் கண்டு மனம் பூரித்துப்போய், 1932—ம் வருஷத்திய நிலைக்கும், இந்த 1942—ம் வருஷத்திய நிலைக்கும், எவ்வளவு பேதம் ஏற்பட்டுவிட்டதென்பதை நினைத்து அதிசயித்தவனாய், காலசக்கரச் சுழற்சியினுடைய வேகத்தின் மஹாத்மியத்தை நினைத்தவாறு என் நஞ்சான் குஞ்சான்களாகிய உங்களிடம் வந்து எல்லாவற்றையும் தெரிவித்து விட்டேன்! நீங்களும் சந்தோஷத்துடன் கேட்டுக்கொண்டு மற்றவர்களுக்கும் போய்ச் சொல்லுங்கள்! ஐக்கியமே பெரிய பலம்; ஐக்கியமே பெரிய அபிவிர்த்தி; ஐக்கியமே பெரிய வாழ்வு; ஐக்கியமே பெரிய ஸ்வராஜ்ய சித்தி; ஐக்கியமே கடவுளின் அனுக்கிரகத்தைப் பெறும் வழி. ராம் ராம்! சுபம்! ஞு!! சுவாஹா!!!

—




சிரைத்துவிட்டால் நரைத்தமீசை வெளிக்குத் தெரியாதாம்!

ஃ

1932-ம் வருஷத்தில் தொல்லைகளே மிகவும் கண்டோர், 1933-ம் வருஷமாவது சுகமில்லையில் வைக்காதா வென்றுபுது டைரிகளுடன் புது வருஷத்தை எதிர்பார்க்கிறார்களாம்!

ஃ

இப்போது பிறந்துவிட்டமார்கழியிலே ஸ்ரீரங்கம் வைகுண்ட ஏகாதசி, சிதம்பரம் ஆருத்ரா தரிசனம், ஏசுநாதர் பிறத்தல், அவரது பக்தர்கள் கேசுபுட்டி திறத்தல்—முதலியன யாவும் இனி தொடங்கிக்கொள்ளுமாம்! ஃ

ஒன்றை இரவல் கேட்டுக் கெஞ்சுவதெல்லாம் அதைப் பெறுகிறவரைக்குந்தானும்! பின்போ தராமலே நான் பல கடத்தி ஏமாற்றி மிஞ்சிப் பேசுதலாம்! ஃ

கோயிலின் வாயிற்படியிற் கிடந்தேனும் உயிர்விட்டுத் தீண்டாதாரின் பிரவேசத்தைத் தடுப்போமென்று வைதீகர்கள் கூறியதை அவர்களின் வீட்டார் கேட்டு, ஓ! எங்களை விட்டுப் போய்விடக்கூடாதென்று கண்ணிருடனும் கதறவே, இவர்களும் அது சும்மா சும்மா பயமுறுத்திய வெறும் வாய்ச் சொல்லே என்று சமாதானம் சொன்னார்களாம்!

ஃ

மேஜைமேல் மறந்துவைத்த பணப்பையிலிருந்து பக்குவமாக உடனே எடுத்துவிடும் தீரர்களிற் சிலர் விகட சபைக்கு வேண்டுமாம்!

ஃ

ஒருதரம் மோசம் செய்தவனை மறுபடியும் அழைத்து, அவன் ஒப்பாத விதமாய்க் குறைந்த கூலி பேசி, அவன் தானாகவே எழுந்து சென்றுவிடும்படி செய்தால், அது அவன் கன்னத்தில் அடிக்காமலே அடித்த அடி போலிருக்குமாம்!

ஃ

தாசியாயிருக்கப்பட்டவள் பஞ்சம ஸ்திரீயாக யிருந்தாலும், அவளுடைய வாயின் எச்சிலுக்குத் தீண்டாமைத் தோஷம் கிடையாதாம்! ஆனால், அவள் கோயிலுக்குள் மட்டும் வரக்கூடாதாம்! ஃ

இத்தனை நாள் இவர்களுக்கெல்லாம் இட்டு என்னபலன் கண்டுவிட்டதென்று யோசிக்க ஆரம்பித்துவிட்டவனின் வீட்டில் முன்போல் அதிகம் தங்கிக் குந்திக்கொள்ள முடியாதாம்! ஃ

பெண் மோப்பம் வைத்துவிட்டவன் தந்திரமாய் ஒரு வீட்டுக்குள் நுழையும் நேரம், அநேகமாய் வீட்டுக்காரன் அப்போது வெளியே போயிருக்கிற பொழுதாகவே பொருந்திக் கொண்டு மகிழவைக்குமாம்! பிறகு அகப்பட்டு உதைப்பட்டு விழிக்கிற வேளை வேறென்று இருக்கிறதாம்!

ஃ

பெண்ணைப்பெற்ற விசாரம் தீருவதற்கு இன்னும் நாலு குழந்தைகள் பெண்ணாகவே பிறந்துவிட்டால் சரியாகப் போய்விடுமாம்!

ஃ

வீட்டுச் செலவுகளைச் சிக்கனமாய் நடத்த நினைக்கும் போதெல்லாம் வியாதி வந்து வைத்தியச் செலவுகளும், விருந்துகள் வந்து உபசாரச் செலவுகளும் அதிகரிக்குமாம்!

ஃ

தந்திரமும் செட்டும் சமர்த்துமுள்ள இடத்தில் அன்பும் ஒற்றுமையும் ஓடிவிடுமாம்!

---

# நன்மை பெறுவதற்குரிய நுட்பங்கள்.



அதிருஷ்டம் என்பது ஒருவர் பங்கல்ல; ஆயினும் அதை ஏற்றுக்கொண்டு ஆளும் திறமையுடையவர்க்கன்றி மற்றவர்க்கு அது வாய்க்காது. 'வருவது வழித்தங்காது.' நமக்கு அதிருஷ்டம் வருவதானல் நம்மிடம் செல்வத்தைக் கொண்டுவந்து சொரியுமென்றெண்ணி யாதொரு முயற்சியுமின்றி சும்மா இருப்பது புத்தியீனமேயன்றி வேறல்ல. அவ்விதம் உள்ளவரையில் காரியசித்தி என்பது கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. எல்லாம் அவரவர் அதிருஷ்டப்படியே நடக்கின்றன என்றாலும், மனிதருடைய முயற்சியின்றி ஒரு காரியமும் நிறைவேறாது.

ஃ

வெற்றிபெற நினைத்தவர்களுக்கு இடையூறு செய்வது ஒன்றுமில்லை. தொடங்கிய கருமத்தை முடித்தே தீரவேண்டும் என்ற மனோ உறுதி கொண்டு விடாமுயற்சியுடன் பாடுபடுவோமானல் அப்போது நாம் எதிர்பார்த்ததினும் பன்மடங்கு உதவிகள் நேர்ந்துகொண்டே இருக்கும். நம் முயற்சிகள் யாவும் கைகூடாமல் நிராசையாகிற பெருங்கடலில் நாம் மூழ்கும்படி நேரும் தருணத்தில் கருணைக்கடலான கடவுள் நமக்கு மறுபடியும் ஆசை காட்டிக் கைகொடுப்பார். இதற்கு ஒரு உதாரணம் கூறுவோம். வித்தியாப்பியாசமே தொழிலாகக் கொண்ட ஒரு வாலிபன் தன் உயிரையே ஒழித்துவிட எண்ணித் தெருக்கள்தோறும் திரிந்துகொண்டிருந்தான். அவன் தன் வாழ்நாளில் பற்பல கஷ்ட நஷ்டங்களை அனுபவித்ததே அவனை அங்ஙனம் செய்யத் தூண்டியது. இப்படிப்பட்ட நிலையில் உயிர் வைத்திருப்பதைவிட விட்டு விடுவதே மேல் என நிச்சயித்தான். இங்நிலையில் அவன் மெல்ல மெல்ல ஆற்றங்கரைக்குப் போகையில் நடுவில் பெருமழை பொழியலாயிற்று. அதுகண்டு அவன் ஞாபகப்பிசகாய் மழை நிற்கட்டும் என்று அங்கிருந்த மண்டபத்தில்போய் தங்கினான். அவனைப்போலவே மண்டபத்தில் மழைக்காக வேறு ஒருவனும் வந்து அவனண்டை உட்கார்ந்திருந்தான். அச்சமயத்தில் அவர்கள் தலைக்கு நேராய் அம்மண்டபத்தின் கட்டிடம் இடிவிழுந்து அங்கு உட்கார்ந்திருந்த இரண்டாவது மனிதன் தலையில்விழ அவன் இறந்துபோனான். தன் உயிரைத் தான் ஒழித்துவிட விரும்பிய வாலிபன் ஆபத்திலிருந்து தப்பினன். அது சமயம் கடவுள் தன்னிடம் கருணை வைக்கவில்லை என்று தான் நினைத்தது தவறு என அவனுக்குத் தோன்றியது. அண்டையில் இருந்தவன் இடிவிழுந்து சாக தன்னைக் காத்த கடவுள் தன்னை ஒருபோதும் கைவிடார் என்ற நம்பிக்கையும் உறுதி

---

"ஒரு குறிப்பான திருத்தம் வல்லமையுடையதானல்,—காலத்தின் தேவையை உத்தேசித்து வந்ததானல்,—அதை உலகில் எந்த சக்தியும் தடுக்கமுடியாது."—மகாத்மா.

யும் அவனுக்கு ஏற்பட, பின்பு தன் ஆயுளளவும் ஒரு குறைவுமின்றிப் பெருமையுடன் வாழ்ந்திருந்தான்.

ஃ

"காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்" என்றபடி சாதாரண சமயமாயினும் ஒன்றை எப்போது கிடைக்கப்போகிறதென எதிர்பார்த்திருந்து அது நேரிடும் தருணம் கண்டு அப்பொழுது அதை விடாமல் கைக்கொள்ள வேண்டும். அற்பமானவை என்று எதையும் தள்ளுதல் கூடாது. பெருத்த லாபமே கிடைக்கவேண்டும் என்றும் எதிர்பார்த்திருக்கலாகாது. ஏனெனில், அப்படிப்பட்ட தருணம் வாய்க்காதுபோனாலும் போகும்.

ஃ

ஒரு வாலிபன் பள்ளியில் சம்பளமின்றிச்சேர்ந்துவாசிக்கவிரும்பினான். அதன்பொருட்டு அவன் ஒரு வித்தியாசாலையை அடைந்து தன் கதைகளை அதன் தலைவரிடம் கூறித் தன்னைச் சேர்த்துக்கொள்ளவேண்டினான். இலவச மாணவர்களின் எண்ணிக்கை நிறைந்துபோனதால் அதன் தலைவர் இந்தச் செய்தியை வாயால் கூறத்துணியாது ஒரு பாத்திரத்தில் வழிய வழியத் தண்ணீர் ஊற்றி மாணவனின் எதிரில் காட்டினார். அக்குறிப்பை அறிந்த மாணவன் ஒன்றும்கூற வழி இன்றித் துக்கத்துடன் திரும்பினான். சிறிது தூரம் சென்றதும் அவன் முகத்தில் ஓர் மலர்ச்சி உண்டாயிற்று. உடனே கீழே குனிந்து உலர்ந்த சருகு ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு வித்தியாசாலைத் தலைவரிடம் சென்று அவர் வைத்திருந்த பாத்திரத்தின் தண்ணீரில் போட்டான். இச்செய்கையே அவன் அதிருஷ்டத்திற்கு ஏதுவாயிற்று. உடனே அவன் பள்ளியில் சேர்த்துக்கொள்ளப்பட்டான். இதிலிருந்து விடாமுயற்சியுடன் பாடுபடுகின்றவர்களுக்குக் காரியம் இடையூறு இன்றி நிறைவேறுகின்றது என்பது தெளிவாகும். இத்தகைய சோதனையான காலத்தில் தான் கடவுளுக்கும் அவர்களிடத்துக் கருணை அதிகமாய் உண்டாகின்றது.

ஃ

காலத்தின் பெருமையைத் தக்கபடி கொண்டாடுவதும் நன்மை பெறுவதற்குரிய நுட்பங்களில் ஒன்றாகும். வாழ்நாளைக் களிப்புடன் நடத்த விரும்புகிறவர்கள், தற்காலத்தின் ஒவ்வொரு நிமிடத்தையும் நன்றாக அறிந்து சிறிதளவும் வீண்போக்காது நல் விஷயத்திலேயே மனதைச் செலுத்தவேண்டும். சென்றுபோன காலம் திரும்பாது. ரயிலுக்கு ஒரு நிமிஷம் தாமதித்துச் சென்றாலும் வண்டி கிடைக்காது. ஒவ்வொரு நிமிஷத்தின் வரவுக்குக் காத்திருந்து நன்மைதேட முயலவேண்டும். ஓய்வு இருப்பின் அதைச் செய்யலாம், இதைச் செய்யலாம் என்பர் சிலர். வருந்தித் தேடுவோர்க்கே ஓழிவு ஏற்படும்.

ஃ

மனிதன் முன்னேற வசதிகளும் உதவிகளும் உலகத்தில் இருக்கும் போது சிலர் எத்தொழிலில் புகினும் பழய நிலைக்கே வந்துவிடுவதன் காரணம் அவர்களிடத்துக் குடிகொண்ட மூட நினைவுகளேயாகும். அதிருஷ்

---

*சிறு வயது, சுந்தர முகம், அழகான சரீரம், பெரிய உத்தியோகம்—எல்லாம் சரிதான். நற்குணம் என்பது அங்கு இருக்கிறதோ இல்லையோ! ஏனெனில் மிகு ரூபவந்தர்களா யிருப்போரது நல்லொழுக்கம் நீடித்திருப்பது கஷ்டமாகிறது.*

டம் கொடுக்கவந்த நன்மையை வாங்கிக்கொள்ளத்தக்க உயர்ந்த தன்மை அவனிடத்தில் இல்லை என்பதும், பாக்கியம் உண்டானால் தானே வரும் என்ற அசட்டு நினைவும், அவனிடத்தில் குடிகொண்டுள்ளது என்பதும் ஆராய்ந்து பார்த்தால் விளங்கும்.

ஃ

நன்மை பெறுவதற்குரிய நுட்பங்களில் முக்கியமானது தன்னம்பிக்கையே ஆகும். நம்மை நாம் நம்பாவிடில் அன்னியரை நம்புவது எங்ஙனம்? தன்னம்பிக்கையின்றி பிறந்தபடியே இருந்து சாவோர் பலர். கூச்சத்தினாலும் கோழைத்தனத்தினாலும் ஒன்றும் செய்யத் துணியாது கடைசியில் உதவாப் பிராணிகளாய்ப் போகின்றவர்கள் சிலர். ஆகவே, தன்னம்பிக்கை முக்கியமாகும். "தேடாது அழிக்கிற் பாடாய் முடியும்" என்பது மற்றோர் நுட்பநீதி. கையிலுள்ள தனத்தைக் கண்டபடி செலவுசெய்து விவேகமற்ற மனிதனாய்த் திரிவது பெரும் பிழையாகும். வரவுக்குத்தக்க செலவுசெய்து வாழ்நாளைப்போக்க வழி தேடவேண்டும்.

ஃ

யாவற்றுக்கும் மேலாய் நிற்பது நற்குணமுள்ள இல்லாளைப் பெற்றிருப்பதேயாகும். இல்லறத்திற்குரிய யாவும் இல்லாளைப் பொருத்து வருவதாகும். குடித்தனத்தைச் செட்டும் சீருமாய் நடத்திவரத்தக்க திறமையுடையவளாயும், நற்குணம் நற்செய்கை பொருந்தியவளாயும் இருத்தல் வேண்டும். அவ்விதமின்றிக் கெட்ட குணம் குடிகொண்டவளானால் அவனால் குடித்தனமே கெட்டுப் போகும். அவள் இருப்பதைவிட இறப்பதே மேல் எனத் தோன்றும். பொல்லாத குணமுள்ள பெண்ணைக் கொண்டோமாயின் பெருந் துன்பத்திற்கு ஆளாகித் "தூற்றும் பெண்டிர் கூற்றெனத்தகும்' என்னும் வாக்கிற்கு இலக்காக நேரிடும். "பெண்சாதி கெட்டால் புருஷனும் கெட்டான்" என்பது பழமொழி. புருஷனுக்குச் சகல பெருமைகளும் அமைவது மனைவியின் மூலமேதான். தாதிபோல்பணிவிடை செய்பவளும், மந்திரிபோல் ஆலோசனை கூறுபவளும், கணவன் கோபித்தாலும் பொறுமையுடன் ஏற்று அதற்குத் தகுந்தபடி நடப்பவளும், "தாய்க்குப் பின்தாரம்" என்றபடி புருஷனை இனிய உணவு முதலியவைகளால் உபசரித்துத் தாய்போல் காப்பவளும், இனிய வார்த்தை சொல்லித் தேற்றுகிறவளும், காதலனுக்குக் களிப்பை உண்டாக்கும் உத்தம குணங்கள் உள்ளவளான மனைவியைப் பெற்றவன் பாக்கியமே பாக்கியம்!

ஃ

மற்றும் மனிதனுக்குத் திருப்தி என்பது அத்தியாவசியமாகும். செல்வத்தைத்தாராது அதிருஷ்டம் சில சமயங்களில் உயர்ந்த பதவியை மட்டில் தரும். அம்மட்டில் திருப்தி கொண்டு தன்னம்பிக்கையில் நம்பிக்கை வைத்து "தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை அம்மா பெரிதென்று அகமகிழ்க" என்றபடி சந்தோஷமாய் சோம்பல் இன்றி முயற்சி செய்து கொண்டிருப்பவர்களுக்கு எவ்விதக் குறைவும் உண்டாவதில்லை என்பது நிச்சயம்.

---

மேல்நாடுகளில் இப்பொழுதுள்ள உபத்திரவத்திற்கெல்லாம் மூலகாரணம்—மாணவர்களாக இன்று உள்ளவர்கள் பிற்காலத்தில் ஒழுங்காக வாழும்படிச் செய்ய அவர்களைச் சில ஹத்துகளுக்குட்படுத்தவேண்டியது அவசியமென்ற பூர்வீக நாகரிகம் நினைத்ததுபோல், நாம் இப்பொழுது செய்யாததே என்று ஆசிரியர் ஜாக்ஸ் என்ற வித்வான் கூறியிருக்கிறார்.

# சோளமுத்துவின் உத்தியோகம்.



சொக்காபுரம் முனிசிபாலிட்டியில் சோள முத்துவுக்கு ஊர் குப்பைகளை யெல்லாம் அப்புறப்படுத்துகிற வேலை. அவன் தனது மேன்மை பொருந்திய உத்தியோகத்தை மிகுந்த கௌரவமாக நினைத்து ஒழுங்காகச் செய்து வந்தான். அவன் எப்பொழுதும் மானத்தின் மேலே கண்ணுடையவன். நிரம்பவும் மோசக்காரன். அந்த முனிசிபாலிட்டியின் சிப்சானிடரி இன்ஸ் பெக்டர் பி. வி. இ. பிள்ளை வயசாகவே பத்தொன்பது பிராய முன்னவர். அதிர்ஷ்டமும், செல்வமும், கல்வியும் அந்தச் சிறுபோதிலேயே பெரிய உத்தியோகத்தைப் பெறச்செய்தது. பிள்ளை குள்ளமாகவே இருந்ததால் ' குள்ள ஆபீஸர் " என்ற திருநாமத்துக்குக் குரியவரானர். எல்லோருமே அந்தத் திருநாமத்தை உச்சரிப்பவர்களாயினும் பிள்ளையின் முன்பு சொல்வதில்லை. அது ஒரு மரியாதை?

ஃ

ஒரு தினம் சோளமுத்து தனது குப்பை வண்டியை ஒரு தெருவின் பக்கத்திலே ரதஸாரத்தியம் செய்துகொண்டு சென்றபின் அத்தெருவிலுள்ள பெருந்தேவி அம்மாள் தனது ஒருமாதக் குப்பையை வெளியே கொட்டி விட்டுச் சென்ருள். அதற்குள் சோளமுத்துவின் தேர் அடுத்த சந்துக்குப்போய் விட்டதால் இதைச் சோளமுத்து அறியவில்லை. சில நிமிஷங்களுக்குப் பிறகு சீப் சானிடரி இன்ஸ்பெக்டர் பி. வி. இ. பிள்ளை அந்தப் பக்கம் தமது சைக்கிளில் வந்து ஒரு பக்கத்தில் பெருந்தேவி யம்மாளின் குப்பை எடுபடாதிருப்பதைக்கவனித்துத் தமது புஸ்தகத்தில் பதிவு செய்து கொண்டு சென்ருர்.

ஃ

---

மிகுந்த படிப்பாளிதான். அவருக்குச் சமானமாக வேறு எவரும் இல்லைதான். ஆனுல் வாக்கு நாணயமோ. நடத்தைச் சுத்தியோ, நல்ல நம்பிக்கைக்கியான குணமோ இல்லாமல், நிமிஷத்திற்கொருமாதிரியா யிருந்தால்—அத்தகையோரின் படிப்பின்மீது மட்டும் மதிப்பு வைத்து அந்த மனிதரின்மீது வெறுப்புடன் விலக நேர்கிறது.



ஒருவன் வீட்டுக்கு ஒரு விருந்தாளி வருகிருர்· அவர் சத்தியவந்தராயிருந்தால் இடையே பேச்சை நிறுத்திவிட்டு, புசிப்புக்கு அழைத்துத் தொந்தரை செய்கிருன். ஏதேனும் உண்டபிறகு பேசலாமென்கிருன். வந்த விருந்தாளி மாயாஜாலக்காரனு யிருப்பின் எந்தப் புசிப்புக்கும் அழைக்காமல் வாய்ப்பேச்சிலேயே காலம் போக்கி அனுப்பிவிடுகிருன்.



மத்தியானம் 3-மணிக்கு ஒரு ரஸ்தாவின் மூலையில் பி. வி. இ. பிள்ளையின் ஆபீஸ் கூடிற்று. சோள முத்துவும் வேறு சில தேரோட்டிகளும் விஜயம் செய்திருந்தனர். பிள்ளை சோள முத்துவின்மீது இன்ன இடத்தில் அப்படியே குப்பை யிருந்ததென்று குற்றஞ் சாட்டினர். சோளமுத்து அந்த இடத்துக் குப்பையைத்தான் நன்றாக வாரிவிட்டதாய்ச் சொன்னன். குள்ள ஆபீஸருக்குக் கோபம் பிறந்துவிட்டது. இங்கே வாடா என்றார். சோள முத்து கையால் வாயைப் பொத்தியவண்ணம் அவர் முன்புவந்து குனிந்து நின்றான். குள்ள ஆபீஸர் விட்டார் ஓர் பலத்த அடி அவன் கன்னத்திலே! சோள முத்துவுக்கு மூன்று நாளாக வலது பக்கம் பல் நோயால் மிகவும் கஷ்டப் பட்டுக்கொண்டிருந்தான். அதின்மேல் கனத்த ஓர் அடி விழவும் அப்படியே அவன் உயிர் துள்ளிப்போயிற்று. தத்தளித்துக்கீழே விழுந்தான். வாயில் ரத்தம் மட மடவென்று வடிந்தது. அவன் தன்னையே மறந்தான். அடுத்த நிமிஷத்தில் எழுந்து சுற்றுமுற்றும் பார்த்து குள்ள ஆபீஸரை ஓங்கிக் கன்னங்களில் அறைந்துக்கீழே தள்ளி முதுகில் தன் திருவடிகளால் ஒத்தடம் நாலைந்து தடவை கொடுத்துப் பூஜை செய்து விட்டான். திருவாளர் பிள்ளையவர்கள் பிறகு பூமியிலிருந்து எழுந்தார்கள். கனத்த அவமானம்! இரு உன்னை என்ன செய்கிறேன் பார் என்று சைகிளில் ஏறி வெகு உக்கிரகமாகச்சென்றார். மீறி விட்டவர்களைத் திருப்பியடிக்க முடிகிறதில்லை யல்லவா? உடனே போலீஸ் ஸ்டேஷனுக்குப்போய் ரிபோர்டு செய்தார் மருதினம் காலை 10-மணிக்கெல்லாம் கோர்ட்டு திறக்கப்பட்டது.



---

காரைக்கும், சுண்ணும்புக்கும், சிமிண்டிக்கும் எவ்வளவு பணம் கொட்டினும் போதாமலே யிருக்கும். கொல்லத்துக்காரன் உதவாக் கட்டைகளையெல்லாம் தன்னுடன் அழைத்துவந்து வேலைகள் கொடுப்பான். அவர்களின் கூலி கொடுத்து சமாளிப்பதற்குள் கண் விழி பிதுங்கும். இவ்வளவுக்குப் பாடுபட்டால்தான் பிறகு சொந்த வீடு—என்று சொல்லிக்கொள்ள வழி ஏற்படும்.

# சோளமுத்துவின் விசாரணை.



நீதிஸ்தலத்தில் மாஜிஸ்திரேட் சோளமுத்துவை உன் அதிகாரியை அடித்தது உண்டா என்று விசாரித்தார். சோளமுத்து கூறியதாவது:—தர்ம துரைகளே! அதிகாரி என்றால் எதிலே அதிகாரி? நான் வேலை செய்வதைக் கவனிப்பதிலே மட்டும் அதிகாரி. என் குடும்பத்திற்கு இவர் அதிகாரியா? என் வீட்டிற்கு இவர் அதிகாரியா? இல்லை. நான் குப்பை கூட்டி எடுத்துப்போன பிறகேதான் பெருந்தேவியம்மாள் குப்பை கொட்டினார் என்பதற்கு என் பக்கமாக அந்த அம்மாள் சாக்ஷி சொல்ல வந்திருக்கு. தர்மதுரைகள் விசாரித்துக்கொள்ளுங்கள். நான் அதிகாரிக்கு வேலையாளானாலும், ஒரு பெண்ணுக்குப் புருஷன், ஒரு பிள்ளைக்குத் தகப்பன், ஒரு குடும்பத்திற்குத் தலைவன், ஒரு வீட்டின் அதிகாரி. நான் தப்பே செய்யவில்லை. செய்திருந்தாலும் கண்டிக்கலாம் திட்டலாம், அவ்வளவே தவிர நேற்றைப் பிள்ளையாகிய இவர் ஐம்பது வயதுக்காரனான என்னை ஓங்கிக் கன்னத்தில் அறையலாமா? என் பல்லில் ரத்தம் வடிந்ததைப் பக்கத்திலே யிருந்த என் பெண்டாட்டி பார்த்துக் கதறி விட்டாள். என் பெண்டாட்டி முன்னே என்னை அடித்ததால் எனக்கு ரோஷம் பிறந்து என்னை மறந்து குன்ன ஆபீஸரை அடித்துப் போட்டேன். வாயில் ரத்தம் வடிந்ததற்கு இந்தாருங்கோ டாக்டர் சர்டிபிகேட்டு பாருங்கோ. சின்ன வயதிலேயே உத்தியோகம் கிடைத்துவிட்டதென்று இப்படி ஏழைகளைப் பல்லுதிர அடித்து அநியாயம் பண்ணலாமா? சாமி, கடவுள் இல்லிங்களா என்று சொல்லி அழுதான்.

ஃ

சோளமுத்துவின்மேல் நீதிபதிபர் இரக்கங்கொண்டார். அவன் வார்த்தைகள் அவ்வளவும் உண்மை யென்று அறிந்தார். பெருந்தேவியம்மாளும் சாக்ஷியம் கூறினள். கடைசியில் குன்ன ஆபீஸருக்கு இருபது ரூபாய் அபராதம் விதித்து, அதை சோளமுத்துவுக்குக் கொடுக்கும்படி தீர்ப்பாயிற்று. அன்றுமுதல் குன்ன ஆபீஸர் என்ற பெயருக்குமுன் “அடிபட்ட” என்ற கௌரவப்பட்டமும் சேர்ந்து வழங்கலானது. வைஷ்ணவர் குருவுக்கு அவர் சிஷ்யர்களின் புஜங்களிலே “சூடு” போட்டதற்கு சிஷ்யர்கள் தக்ஷிணை ஸமர்ப்பிப்பதுபோல, குன்ன ஆபீஸரும் சோளமுத்துவின் திருவடி பூஜைக்குக் காணிக்கை தந்தார் போலும்!

# முக்கியத்தில் முக்கியம்.

1. மானிட சாதி இரண்டு; ஆண் பெண்; இதில் பெண் முக்கியம்.

2. சக்தி மூன்று; தேசசக்தி, மனோ சக்தி, ஆத்மசக்தி; இதில் ஆத்மசக்தி முக்கியம்.

3. அபிமானம் மூன்று; ஜாதியபி மானம், மார்க்காபிமானம், தேசாபி மானம்; இதில் தேசாபிமானம் முக்கியம்.

4. தருமம் நாலு; பசித்தவர்க்கு போசனமளித்தல், கஷ்டப்படுகிற வர்களிடத்தில் அநுதாபப்படுதல், பிழைப்புக்கு வழி காட்டுதல், பிறருக் குத் தீமை செய்யாதிருத்தல்; இவை களில் தீமை செய்யாதிருப்பதே முக் கிய தருமம்.

5. துரோகம் நாலு; இனத்துரோ கம், ராஜதுரோகம், தெய்வதுரோகம், நம்பிக்கைத்துரோகம்; இவைகளில் நம்பிக்கைத் துரோகமே மோச மானது.

6. மக்களுக்கு ஜீவாதாரம் மூன்று; போஜனம், தண்ணீர், காற்று; இதில் காற்றே முக்கியம்.

7. மனிதரின் ஆசை மூன்று; மண்ணாசை, பெண்ணாசை, விண் ணாசை; இவைகளில் விண்ணாசையே விரும்பத்தக்கது.

8. தன்மை அதாவது குணம் மூன்று; பிசாசின் தன்மை, மனிதத் தன்மை, தெய்வத்தன்மை; இதில் தேவதன்மையே சிரேஷ்டமானது.

9. அணிகலம் மூன்று; பாத ரக்ஷை, ஆபரணம், ஆடை; இதில் ஆடையே முக்கியம்.

10. பானவகை மூன்று; மது பானம், தேப்பானம், நீர்ப்பானம்; இவைகளில் நீர்ப்பானமே நன்மை.

11. தொழில் நாலு; உத்தியோ கம், வியாபாரம், கைத்தொழில், விவ சாயத்தொழில்; இவைகளில் விவசா யத்தொழிலே மேலானது.

12. கண்கள் மூன்று; நகக்கண், முகக்கண், அகக்கண்; இவைகளில் அகக்கண்ணே முக்கியம்.

13. புத்தி மூன்று; துற்புத்தி, நற்புத்தி, சொற்புத்தி; இதில் குரு சொல்கேட்டு நடக்கும் புத்தியே மேல்.

14. குருக்கள் நாலு; கல்விக்குரு, சாஸ்திரகுரு, யோக (ஞான) குரு, சற்குரு; இவர்களில் சற்குருவே மேலானவர்.

15. ஓர் கர்மத்தைச் செய்து முடிக்க மூன்று எதுக்கள் வேண்டும். இடம், பொருள், ஏவல்; இதில் ஏவல் முக்கியம்.

16. மனம் மூன்று; வெளி மனம், உள்மனம், ஆனந்தமனம்; இதில் ஆனந்தமனம் மேல்.

17. மக்களை வருத்துகிறது நான்கு; வியாதி, தரித்திரம், பிறர் உபத்திரவம், மனக்கலக்கம்; இதில் மனக்கலக்கமே அதிக வாதனையுள் ளது.

18. பாவகிருத்தியங்களுக்குக் கார ணம் நாலு; துணிகரம், பணஆசை, பெருமை, அறிவீனம்; இதில் அறி வீனமே கெடுதலுள்ளது.

19. புண்ணிய செயலுக்குக் கார ணம் நாலு; பூலோக வெறுப்பு, பர லோக வாஞ்சை, விசுவாசம், அன்பு; இவைகளில் அன்பே பிரதானம்.

P. ஆப்ரஹாம்,

சிலோன்.

# நீங்காத ஆசையும், குறையும்



ஓர் நங்கைக்கு, ஏழு, எட்டு, ஆண் குழந்தைகளே பிறந்த பிறகு அவள் என்ன நினைக்கிறாள்? ஐயோ! எத்தனை ஆண் குழந்தைகள் தானிருந்து மென்ன? நமக்கென்று ஒரு பெண் குழந்தையில்லையே! ஒரே ஒரு பெண் பிறந்தால் போதுமானது என்று விசனப் படத்தொடங்குகிறாள். எப்படியோ அவளது இஷ்டப்படியே ஒரு பெண் குழந்தை பிறந்து விடுகிறது. பிறகாகிலும் குறையில்லாமலிருக்கிறதா? இல்லை. ஃ

ஐயோ! இந்தக் குழந்தைக்கு, சின்ன உடமை, பெரிய உடமை என்று நல்ல நகைகள் போட்டுப் பார்ப்பதற்கில்லையே! என்ற குறை வந்து நிற்கும். அதுவும் கடவுள் கிருபையால் போட்டுப் பார்த்தான பிறகு, நம் குழந்தைக்கு, வீணை, தம்பூரு, பிடில், ஆர்மோனியம், புல்லாங் குழல், ஜலதரங்கம் இவைகளைப் போன்ற வாத்தியங்கள் கொடுப்பதற்கில்லையே என்று ஏக்கம் தோன்றி ஊசலாடும். அதுவும் ஏதோ தெய்வ கடாக்ஷத்தால் நிறைவேறி விடுகிறது. பிறகோ இன்னொரு குறை வந்து நிற்கும். என்ன, நம் குழந்தையை, மெட்ரிகுலேஷன் வரையிலாவது வாசிக்க வைக்கவேணும் என்ற அவா உண்டாகிறது. அதையும் எப்படியோ பணம் செலவு செய்து கஷ்டப் பட்டுப் படிக்கவைத்தாயிற்று. பிறகு பெண்புஷ்பவதியாகியிருக்கும்போது, ஐயோ! நம் குமாரத்திக்குத் தகுந்த புருஷன், எப். ஏ. பி. ஏ. வாக எங்கே கிடைக்கப்போகிறான் என்ற மன வருத்தம் பிடிக்கிறது. இதுவும் இந்தப் பெண்மணியின் அபீஷ்டத்தின் பிரகாரமே கிடைத்து விட்டது. சதியும் புருஷனுமாய் சந்தோஷமாயிருக்கப் பார்த்துக்கொண்டிருக்கிறாளே, அத்துடனாவது குறை முடிந்ததா? இல்லை! ஃ

அண்டை வீட்டு அங்கம்மாள் யாத்திரை போவதற்குப் புறப்பட்டு, இப்பெண்மணியிடம் வந்து, ஏண்டியம்மா! பாக்கியம்! காசி வரையில் போய் வரலாம் வருகிறாயா? இது வரையில் கூப்பிட்டால், எங்கே வருவது; குழந்தையை ஒரு ஐயா கையில் பிடித்துக் கொடுத்துவிட்டால்எனக்கு ஒரு குறையும் இல்லை, எங்கே வேணுமானாலும், போகலாம், என்றாயே? இப்போ என்ன சொல்கிறாய்? என்கிறாள், அதற்குப் பாக்கியம்மாள் ஆஹா வருவதற்கு என்ன தடை, ஒன்றுமில்லை, வருவேன்; ஆனால்; ஒன்று: குழந்தை வயிற்றில் ஒரு பூவோ, காயோ, புழுவோ, பூச்சோ, பிறந்து பார்த்து விட்டால் பிறகு, எனக்கென்ன இருக்கு என்கிறாள். சரி, ஒரு குழந்தையும் பிறந்து விட்டது. பிறகு, அண்டை வீட்டு அங்கம்மாள் வந்து, என்னடி பாக்கியம், என்ன, உன் பேருக்கேற்றாப் போல், எல்லாம் உன் மனசு பிரகாரமே நடந்தேறி விட்டது. இனி என்ன குறையிருக்கிறது, போவோம் வா என்கிறாள். ஃ

அதற்கு அவள் ஆ! நல்ல வேலை செய்தாய்! அது ஆடிப் பாடுவதைக்

கண்ணால் பார்த்து, பிறகு அதின் வயிற்றில் ஒரு குழந்தை பிறந்து வளர்க்க வேண்டாமா என்பான். இப்படியாக எவ்வளவு ஆவலாதிகள் நிறைவேறினாலும் குறை யிருந்து கொண்டே யிருக்குமாம். ஆசையும் ஒன்றின்பின் ஒன்றாக நீங்காமல் பெருகுமாம். இதுவே உலக இயற்கை. பிரபஞ்ச மாயை.

கோமளவல்லி அம்மாள்.

## II
## ஓர் கைம்பெண்ணின் துயரம்.

ஹா! ஜெகதீசா! இந்த மாதிரி அவலமான ஜென்மம் ஒன்றை ஏன் ஏற்படுத்தினையோ! தெரியவில்லையே! எவ்வளவு பாபகர்மங்கள் செய்திருந்த போதிலும் அதை வேறுவகையான கஷ்டங்களில் ஈடுபடும்படி செய்யக்கூடாதா! அந்தோ! ஈசா! எத்தனை எத்தனை விபர்தனைகளுக்கெல்லாம் உட்பட்டு நிற்பதோ? யாராவது வெளியில் புறப்படும்போது எதிர்பட்டால், சீ! ஏன் இந்த அமங்கலி வந்தாள் என்று ஏசுகிறார்கள். நல்ல சுப காரியங்களில் தலை காட்டவே கூடாதாம். சமையற்காரனோடு கஷ்டப்படவும், உக்ராண அறையில் இருந்து எல்லாம் எடுத்துக்கொடுக்கவும், பாதுகாக்கவும், யாராவது பிரசவித்தால் அவர்களுக்கு பத்தியம் பண்ணவும், இன்னும்கஷ்டமான வேலைகள் என்னென்ன விருக்கிறதோ அவைகளையெல்லாம் செய்யவும் வேணுமாம். என்னே! இவ்வுலகம்! யாராவது ஆண் பிள்ளைகளோடு ஒரு பேச்சுப் பேசினால் பட்டங் கட்டிவிடுவார்கள். சீக்கிரம் மரணம் வந்தாலும் இந்தப் பிறவிக்கு ஒரு முடிவு காணலா மென்றாலோ, இக்கடைகெட்ட பிறப்புக்கு இறப்பு காண்பதரிதாகி, தொண்டு கிழவியாகும் வரை உண்டு உழலவேண்டி யிருக்கிறது, பண்டைக் காலத்தில், உடன்கட்டை ஏறும்வழக்கம் இருந்ததாம்; அதை ஏன் நீக்கி விட்டார்களோ தெரியவில்லை. இந்த கலியுகத்தில் இந்தப் பிறவிகள் கணக்கில்லாமல் பரவி விட்டதால், இந்தக் கன்றுவிகள் குறையுமோ என்னவோ! தற்காலம், நூறுபெண் பிள்ளைகள் நடுவில் பத்து சுமங்கலிகளைக் காண்பது அரிதாய் விட்டது. இந்தக்குறையைக் கடவுள் கண்திறந்து பார்க்கவில்லை போலிருக்கிறது. இனியேனும் இந்தத் துன்பங்களைக் கவனித்துக் கருணை புரியுமாறு எல்லாம் வல்ல இறைவனை வணங்கிப் பிரார்த்தித்துக் கொள்ளுகிறேன்.

கோமளவல்லி அம்மாள்.

# “ அமிர்த குணபோதினி ”

## ஆங்கீரஸ வருஷத்திய மார்கழி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| அ | 15 | 1 | வியா | துவி-12-45, புந-56-37, ஷடசிதி, ஸமார்க்கம், தனுர் மாஸ பூஜை ஆரம்பம், திரிதியாதிதி |
| உ | 16 | 2 | வெள் | திரி-16-15, பூச-60-0, சதுர்த்திதி |
| சி-ம | 17 | 3 | சனி | சது-18-50, பூச-0-48, பஞ்சமிதிதி |
| சி-ம | 18 | 4 | ஞா | பஞ்-20-19, ஆயி-3-57, அதிதி |
| ம-சி | 19 | 5 | திங் | ஷஷ்-20-32, மக-5-56, ஷஷ்டிதிதி |
| சி-அ | 20 | 6 | செவ் | ஸப்-19-20, பூர-6-35, திதிதுவயம், காலபைரவாஷ்டமி, அஷ்டகை, கரிநாள். |
| அ-ம | 21 | 7 | புதன் | அஷ்-16-38, உத்-5-46. |
| சி-அ | 22 | 8 | வியா | நவ-12-23, ஹஸ்-3-26, உப-56-14, மகராயனம் 1-8 |
| சி | 23 | 9 | வெள் | தச-6-41, உப-53-3, ஸ்வா-54-35, அவமா, கரிநாள். |
| சி | 24 | 10 | சனி | துவா-51-43, விசா-48-25, வைஷ்ண வைகாதசி. |
| ம | 25 | 11 | ஞா | திர-43-6, அநு-41-39, பிரதோஷம், சிவராத்திரி [கரிநாள். |
| சி | 26 | 12 | திங் | சதி-34-21, கேட்-34-45. |
| அ-சி | 27 | 13 | செவ் | ● 25-53, மூல-28-8, அமாதிதி |
| அ | 28 | 14 | புதன் | பிர-18-6, பூரா-22-14, திதிதுவயம், புஷ்யசுத்தம், அத்தியயன உத்ஸவாரம்பம். [திதி |
| சி | 29 | 15 | வியா | துவி-11-26, உரா-17-28, ரம்ஜான்பீ 1உ திரி தியா |
| ம-சி | 30 | 16 | வெள் | திரி-6-19, ஶ்ரவ-14-18, தூர்வா கணபதி விரதம். |
| சி-அ | 31 | 17 | சனி | சது-3-5, அவி-13-0. |
| சி | 1 | 18 | ஞா | பஞ்-2-3, சத-13-48, மஹா வியதீபாதம். |
| சி | 2 | 19 | திங் | ஷஷ்-3-7, பூட்-16-38. |
| அ-சி | 3 | 20 | செவ் | ஸப்-6-10, உட்-21-18. |
| உ-ம | 4 | 21 | புதன் | அஷ்-10-51, ரே-27-23, தாத்ரீ கௌரீவிரதம். |
| அ-சி | 5 | 22 | வியா | நவ-16-39, அசு-34-27. |
| சி | 6 | 23 | வெள் | தச-23-3, பர-41-55, அதிதி. |
| அ | 7 | 24 | சனி | ஏகா-29-28, கிரு-49-22, வைகுண்ட ஏகாதசி. |
| சி | 8 | 25 | ஞா | துவா-35-30, ரோ-56-15, கூர்மதுவாதசி, திருப்பதி தீர்த்தம். |
| அ | 9 | 26 | திங் | திர-40-47, மிரு-60-0. |
| சி-ம | 10 | 27 | செவ் | சதி-45-11, மிரு-2-25, கூடாரவல்லி. |
| சி | 11 | 28 | புதன் | ○ 48-35, ஆரு-7-39, உதயம் ஆருத்திரா தரிசனம் சிதம்பர தீர்த்தம். |
| அ | 12 | 29 | வியா | பிர-50-59, புந-11-56, புஷ்யபகுளம், போகிபண்டிகை தனுர்மாஸ பூஜை முடிவு. |

(டிசம்பர் (சாப) (5-20) — 1933ஆ ஜனவரி)

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ரா | 15உக்கு ராசி | | |
| சனி | | | குஜ கேது |
| ரவி | புத சுக் | | குரு |

‘ அமிர்த குணபோதினி ” பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1932